# ‘வா.செ.கு.’ என்ற ஆளுமையாளர்

இரா. மோகன்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

வா.செ.கு. அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியவர் : திரு. இராம் ப. சாமி, அமெரிக்கா)
வரிசை எண் : 3

## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | 'Vā.Cē.Ku.' eṉṟa āḷumaiyāḷar |
| Author | : | Dr. R. Mohan<br>Emeritus Fellow, School of Tamil Studies<br>Madurai Kamarajar University<br>Madurai 625 021 |
| General Editor | : | Dr. K.A. Gunasekaran<br>Director<br>International Institute of Tamil Studies<br>Tharamani, Chennai-600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 689 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2010 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | viii + 104 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs.50/- (Rupees Fifty only) |
| Printed by | : | United Bind Graphics<br>189-D, Royapettah High Road<br>Mylapore, Chennai - 600 004. |
| Subject | : | Personality of Dr. V.C.Kulandaisamy as an Educationalist |

பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

## அணிந்துரை

**வா.செ.கு. என்ற ஆளுமையாளர்** எனும் தலைப்பில் வெளியாகும் இந்நூல் பேராசிரியர் இரா. மோகன் அவர்களது ஆய்வுச் சிந்தனையைக் கொண்டமைகிறது.

'எமனை அஞ்சோம்' எனும் சைவக் குரவர் குரலை ஒத்ததாக அமையினும் குலோத்துங்கனின் சிந்தனை வேறுபட்டுள்ளது.

*விண்ணுலகம் உண்டெனினும் விழைவோ மில்லை*
*மீளாத நரகென்றும் பயந்தோ மில்லை*

இறைவனின் துணைக்கொண்டு சொல்லும் குரலிலிருந்து கவிஞர் கொள்ளும் உழைப்பாளர் துணை வேறுபட்டதாக அமைகிறது.

சமூகத்தைத் திருத்தப் பலரும் அவரவர் வழிகளில் சிந்தித்துச் செயல்படுத்திடும் வேளையில் தன்னைக் கலைஞனின் கலைத்திறம்போலக் கவிஞரின் கவித்திறம் என நம்முன் தன்னை அறிமுகம் செய்து கொள்ளும் விதம் வழியே அறியமுடிகிறது.

*. . . . . . காலமெல்லாம்*
*கல்லில் சிலை செதுக்கும்*
*கலைஞனைப் போல், வான் பழகும்*
*சொல்லில் புதியதமிழ்த்*
*துறை படைக்கும் ஆவலுடன்*
*எழுதித் திருத்துபவன். . .*

'புதியதோர் உலகம் செய்வோம்' எனும் பாவேந்தரின் குரலை வழிமொழிபவராகக் குலோத்துங்கன் எனும் கவிஞர் தம் கவிதையில் பதிவு செய்திருப்பது அவரது சமூகப் பொறுப்புணர்வினை எடுத்தியம்புவதாக அமைகிறது.

*இறைவனே நின்படைப்பில்*
*இருக்கின்ற எண்ணிறந்த*
*குறையெலாம் நீக்கிக்*
*குவலயத்தை வான் விழையும்*
*வடிவிலமைக்கின்ற*
*வாய்ப்பெனக்குத் தாராய்*

'கல்விதரும் வீறு பெரிது' எனும் அறிவைத்துணைகொள்ளும் கவிஞர்

*கரிசல் வயல்நிலம் வெடிப்பதுபோல - நம்*
*கண்முன் மானிடம் பிளக்கிறது*

எனும் கவிஞனின் உலகப் பார்வையில் மானுட நேயக் கல்வியை முன்மொழிவதாகவே விளங்குகிறது.

பலப்பல நிலைகளில் பகுத்தறிந்து ஆராய இடம்தரும் பல புள்ளிகளை இந்நூலாசிரியர் சங்கப் புலவர்களின் துணையோடும், தொல்காப்பியரின் துணையோடும், கவிஞரின் கவிதைகளை அலசி அலசி எடுத்து விளக்கிச் செல்லும் பாங்கு வியப்பளிப்பதாக அமைகிறது. இக்கவிஞர் சமகாலக் கவிதைகள் படைக்கும் கவிஞர்களிடமிருந்து எவ்விதம் வேறுபட்டு நிற்கிறார் எனக் காட்டியுள்ளார் இந்நூலாசிரியர்.

சங்கப்புலவர்களின் சுருக்கமான வரிகளில் பெருக்கமான சிந்தனைகளைத் தரும் சங்ககாலக் கவிதைகளின் ஆழ அகலங்களைக் கண்டு வியக்கும் பன்னாட்டுச் சிந்தனையாளர்களே! இதோ இன்றும் எம்மண்ணில் குலோத்துங்கனின் கவிதைகள் ஆலம் விழுதென உரம் கொண்டு செம்மாந்து நிற்கக் காணமுடியும் என முனைவர் இரா. மோகன் அறைகூவல் விடுப்பதாகவே இந்நூல் அமைகிறது. 'ஆமென்'றுரைக்கிறது என் மனமும்.

தமிழ் ஆர்வலர்களும் தமிழ்ப் பண்பாட்டுத் தேடல் உள்ளவர்களும் படித்தறிய வேண்டிய நூல் இதுவாகும்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக் கடன்பட்டுள்ளது.

தமிழ்ப்பணிகளுக்கு ஆற்றுப்படுத்தி வரும் மாண்புமிகு தமிழக நிதியமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன் அவர்களுக்கு எம் நன்றி என்றும் உரியது.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை அரசுச் செயலாளர் திரு. இரா. சிவக்குமார் இ.ஆ.ப. அவர்களுக்கும் நன்றி.

இச்சொற்பொழிவின் எழுத்துருவை மெய்ப்புத் திருத்தம் செய்த முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும், இச்சொற்பொழிவு மற்றும் நூல் வெளியீடு தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்கள் மற்றும் கணிப்பொறியாளர் திருமதி எ.ம. லட்சுமி ஆகியோருக்கும் எம் நன்றிகள் என்றுமுண்டு. இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தாருக்கு எம் பாராட்டுகள்.

இயக்குநர்

# பொருளடக்கம்



## ஆசிரியர் குறிப்பு

இரா.மோகன் மதுரையில் 22.04.1950–ஆம் நாளன்று பிறந்தார். தந்தையின் பெயர் இராமமூர்த்தி. தாய் – இராசலெட்சுமி. அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் உயர்நிலைப் பள்ளியில் கல்வி பயின்ற மோகன், கவியரசு முடியரசனின் மாணவர். மதுரை தீந்தமிழ்த் தியாகராசர் கல்லூரியில் பயின்று 1972–இல் முதுகலைப் பட்டம் பெற்றார்; மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் 'கு.ப.ராஜகோபாலன் சிறுகதைகள்' என்னும் பொருளில் ஆராய்ந்து 1976–ஆம் ஆண்டில் முனைவர் பட்டம் பெற்றார்.

மதுரை காமராசர் பல்கலைக்கழக அஞ்சல்வழிக் கல்வித் துறையில் 01.11.1976–இல் விரிவுரையாளராகப் பணியில் சேர்ந்த முனைவர் மோகன், 1987–இல் தமிழியற் புலத்தில் விரிவுரை யாளராகச் சேர்ந்தார்; இணைப் பேராசிரியர், பேராசிரியர், ஒப்பிலக்கியத் துறைத் தலைவர், சிறப்பு நிதியுதவித் திட்ட ஒருங்கிணைப்பாளர், புல ஒருங்கிணைப்பாளர், மூத்த பேராசிரியர் எனப் பல்வேறு பொறுப்புக்களில் 34 ஆண்டுக் காலம் தமிழியற் புலத்தில் பணியாற்றினார். மூன்று ஆண்டுக் காலம் பல்கலைக்கழக ஆட்சிக் குழு உறுப்பினராகவும் இவர் பணியாற்றியுள்ளார்.

'டாக்டர் மு.வ.வின் நாவல்கள்' என்பது இரா.மோகனின் முதல் நூல்; 1973–ஆம் ஆண்டில் வெளிவந்தது. ஆய்வும் பதிப்பும் தொகுப்புமாக இதுவரை இவரது 82 நூல்கள் வெளிவந்துள்ளன. இவரது 'இன்பமே எந்நாளும்' என்ற நூல் பாரத மணித்திரு நாட்டின் முன்னைக் குடியரசுத் தலைவர் டாக்டர் ஆ.ப.ஜெ.அப்துல் கலாமின் பாராட்டினைப் பெற்றதாகும். இவரது நூல்கள் பல பல்வேறு பல்கலைக்கழகங்களிலும் தன்னாட்சிக் கல்லூரிகளிலும் பாட நூல்களாகப் பரிந்துரைக்கப் பெற்றுள்ளன.

'இலக்கியச் செல்வர்' குமரி அனந்தன் உட்படப் பேராசிரியர் மோகனின் மேற்பார்வையில் இதுவரை 22 பேர் முனைவர் பட்டம் பெற்றுள்ளனர். இருவர் தங்கள் முனைவர் பட்ட ஆய்வேடுகளைப் பல்கலைக்கழகத்திற்கு ஒப்படைத்துள்ளனர்.

பேராசிரியர் மோகன் தேமதுரத் தமிழோசையைப் பரப்புவதற்காகச் சிங்கப்பூர் (5 முறை), மலேசியா (2 முறை), அமெரிக்கா (2 முறை), இலங்கை, ஷார்ஜா ஆகிய அயல்நாடு

களுக்குச் சென்று வந்துள்ளார். இவர் பல்வேறு வானொலிகளிலும் தொலைக்காட்சிகளிலும் இராண்டாயிரத்திற்கும் மேற்பட்ட உரை நிகழ்ச்சிகளை வழங்கியுள்ளார்.

சாகித்திய அகாதெமியின் ஆலோசனைக் குழு உறுப்பினர், பொதுக்குழு உறுப்பினர், இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத் தலைவர், திருமலை திருப்பதி தேவஸ்தானம் தமிழாசிரியர்கள் நூல் வெளியீட்டிற்கு நிதியுதவி நல்கும் குழுவின் உறுப்பினர், இலக்கிய இணையர் அறக்கட்டளை நிறுவனர் முதலான பல்வேறு பொறுப்புக்களில் வீற்றிருந்து பேராசிரியர் மோகன் ஆற்றிய, ஆற்றி வரும் பணிகள் குறிப்பிடத்தக்கவை.

அமெரிக்கத் தமிழ்ச் சங்கப் பேரவையும் தமிழ்நாடு அறக்கட்டளையும் இணைந்து 2002–இல் பேராசிரியர் மோகனுக்குத் 'தமிழ்ச் சுடர்' என்னும் விருது வழங்கிச் சிறப்பித்துள்ளன. மதுரை தமிழ் இசைச் சங்கம் ராஜா சர் அண்ணாமலை செட்டியார் 125–ஆவது பிறந்த நாள் விழாவில் இவரது இலக்கியப் பணியினைப் பாராட்டி 30.19.2005– அன்று பொற்கிழியும் சான்றிதழும் வழங்கிச் சிறப்பித்துள்ளது. மேலும் இவர், பாரத மாநில வங்கி வழங்கும் சிறந்த நூலுக்கான விருது, தமிழ்ப் பண்பாட்டு ஆய்வு நிறுவனத்தின் இலக்கிய விருது எனப் பல விருதுகள் பெற்றுள்ளார்.

சாகித்திய அகாதெமியின் 'இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசை'யில் பேராசிரியர் மோகன், கு.ப.ரா., கல்கி, வ.சுப.மாணிக்கம், முடியரசன் ஆகியோர் குறித்து நூல்கள் எழுதியுள்ளார். 'தமிழ்க் கட்டுரைக் களஞ்சியம்', 'தமிழ் ஹைகூ ஆயிரம்', 'நாவல் வளர்ச்சி', 'புதுக்கவிதை அணிவகுப்பு', 'நகைச்சுவைக் களஞ்சியம்' ஆகியன இவர் வெளியிட்டுள்ள சிறந்த தொகை நூல்கள் ஆகும்.

2010–இல் வெளிவந்த 'இலக்கிய இணையர் பேராசிரியர் இரா.மோகன் – முனைவர் நிர்மலா மோகன் மணி விழா மல'ரும் 'பேராசிரியர் இரா.மோகனின் படைப்புலகம்' என்னும் தொகை நூலும் (2011) தமிழியல் வளர்ச்சிக்குப் பேராசிரியர் மோகனின் பங்களிப்பினைப் பறைசாற்றுவனவாகும்.

# சில சொல்

'பேராசிரியர் வா.செ.குழந்தைசாமியின் பெயரால் நிறுவப் பெற்றுள்ள அறக்கட்டளையில் நீங்கள் உரையாற்ற வேண்டும்' என என் கெழுதகை நண்பர் பேராசிரியர் கரு அழ.குணசேகரன் அழைப்பு விடுத்த போது, என் நெஞ்சில் இன்பத் தேன் வந்து பாய்ந்தது; நான் இரட்டிப்பு மகிழ்ச்சி அடைந்தேன். முதலாவது, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் இருந்து வந்திருக்கும் முதல் அழைப்பு; அழைத்திருப்பது முனைவர் குணசேகரன். அடுத்தது, பேராசிரியர் வா.செ.கு.வின் அறக்கட்டளையில் உரையாற்றுவது. எனவே மகிழ்வுடன் என் இசைவினைத் தெரிவித்தேன்.

பேராசிரியர் வா.செ.குழந்தைசாமி மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் சிறிது காலம் (1978 – 1979) துணைவேந்தராகப் பணியாற்றினார்; அப்போது நான் பல்கலைக் கழகத்தின் அஞ்சல் வழிக் கல்வித் துறையில் விரிவுரையாளராகப் பணியாற்றிக் கொண்டிருந்தேன். அவர் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் பணியாற்றியது சிறிது காலமே என்றாலும், அதில் முத்திரை பதித்தார்; பல்கலைக்கழகக் கூட்டங்களில் அவரது உரைகளைக் கேட்ட போது, அவரது ஆளுமைப் பண்பு என்னை ஈர்த்தது. தொடர்ந்து, அவரது நூல்களைப் பயின்ற போது, அந்த ஈர்ப்பு என்னுள் பன்மடங்கு வளர்ந்தது. நான் பேராசிரியராகி எழுத்துப் பணியில் ஈடுபட்ட போது, அவரது படைப்புக்கள் குறித்து அவ்வப்போது கட்டுரைகள் எழுதலானேன். கட்டுரை எழுதி முடித்ததும் அவருக்கு அதன் படியினை அனுப்பி வைப்பது என் வழக்கம். கட்டுரை சென்று சேர்ந்த நாளே ஒன்று, அவரிடம் இருந்து தொலைபேசியில் அழைப்பு வரும்; அல்லது மறுநாள் கடிதம் வரும். அதில் அவர் தம் கருத்தினைத் தெரிவித்திருப்பார்; பாராட்டு மொழிகளையும் வழங்கி இருப்பார்.

பேராசிரியர் வா.செ.குழந்தைசாமியின் படைப்புக்கள் குறித்துப் பல்வேறு தருணங்களில் நான் எழுதிய கட்டுரைகளையே, சற்று விரிவுபடுத்தி இந் நூல் வடிவம் தந்துள்ளேன்.

குறுகிய காலத்தில் என் கட்டுரைகளின் கையெழுத்துப் படிகளைக் கணினியாக்கம் செய்து தந்தவர் என் அருமை மாணவர் பேராசிரியர் த.பாலாஜி ஆவார். அவருக்கு என் நெஞ்சார்ந்த நன்றி.

மிகக் குறுகிய காலத்தில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் பேராசிரியர் வா.செ.குழந்தைசாமி பற்றிய என் அறக்கட்டளைப் பொழிவினை அழகிய நூல் வடிவில் வெளிக்கொண்டு வந்துள்ளது. மீண்டும் ஒருமுறை அறக்கட்டளை தொடர்பான அனைத்து நண்பர் களுக்கும் என் நன்றியறிதலைக் காணிக்கையாக்குகின்றேன்.

**இரா.மோகன்**

# 1. 'ஆழ்ந்திருக்கும் கவியுளம்'

> அறிஞர் வா.செ.குழந்தைசாமி பாரதிதாசன் பரம்பரைக் கவிஞர். ஆயினும் கூட்டத்திலிருந்து வேறுபட்டு ஒலிக்கும் குரல் அவருடையது. அவருடைய கவிதையின் மையம் தமிழ்ச் சமுதாயத்தைத் தேக்கத்தினின்றும் காப்பதும், அறிவியல் அணுகுமுறையைப் புகட்டுவதும் ஆகும்.
>
> —சிற்பி பாலசுப்பிரமணியம்[1]

அன்பும் அறனுமே இல்வாழ்க்கையின் பண்பும் பயனும் ஆகும் என்பது வள்ளுவம் (திருக்குறள், 45); அதுபோல, ஆழ்ந்திருக்கும் கவியுளம் காண்பதே திறனாய்வின் பண்பும் பயனும் ஆகும்.

*அணிசெய் காவியம் ஆயிரம் கற்கினும்*
*ஆழ்ந்தி ருக்கும் கவியுளம் காண்கிலார்*[2]

என்னும் கவியரசர் பாரதியார் கூற்றும் எதிர்மறை வாய்பாட்டால் இக் கருத்தினை வலியுறுத்தும்.

> குலோத்துங்கன் கவிதைகள் பற்றிய ஆய்வு, அவர் கவிதைகளில் காணப்படுவன பற்றி மாத்திர மல்லாது, அவரது கவித்துவ ஆளுமையின் வளர்ச்சி பற்றியதாகவும் அமைதல் அவசியம். அவ்வாறு ஆய்வு செய்யப்படும் பொழுதுதான் குலோத்துங்கன் கவிதை பற்றிய முழுமையான பார்வை கிட்டும்[3]

என்பது பேராசிரியர் கார்த்திகேசு சிவத்தம்பியின் மதிப்பீடு. நுண்மாண் நுழைபுலம் சான்ற இம் மதிப்பீட்டின் ஒளியில் குலோத்துங்கன் கவித்துவ ஆளுமை குறித்து இவ்வியலில் காணலாம்.

**கவிஞரின் குறிக்கோள்**

*நமக்குத் தொழில் கவிதை நாட்டிற்கு உழைத்தல்*
*இமைப்பொழுதும் சோராது இருத்தல்*[4]

என்பது பாரதியாரின் வாழ்நாள் குறிக்கோள்.

*புதியதோர் உலகம் செய்வோம் – கெட்ட*
*போரிடும் உலகினை வேரோடு சாய்ப்போம்*[5]

என்பது பாரதிதாசனின் குறிக்கோள் முழக்கம். இருபதாம் நூற்றாண்டுக் கவிதை உலகின் இருபெருஞ் சுடர்களான இவர்கள் இருவரின் அடிச்சுவட்டில் பீடு நடைபயின்று வரும் குலோத்துங்கன்,

*. . . . . . . . . . . யாங்கும்*
*எல்லோர்க்கும் சமவாய்ப்பு நிறைந்த தான*
*மண்ணுலகைச் சமைப்பதும்எம் குறிக்கோள்*[6]

எனத் தம் குறிக்கோளை 'விண்ணுலகம் உண்டெனினும்' என்னும் கவிதையில் வெளியிட்டுள்ளார். அவரைப் பொறுத்தவரையில், 'நாளை வருகின்ற தலைமுறையின் வாழ்வுக்காக, கூடி உழைப்பதுவே மகிழும் இன்பம்'. மற்றபடி,

*விண்ணுலகம் உண்டெனினும் விழைவோ மில்லை;*
*மீளாத நரகென்றும் பயந்தோ மில்லை*[7]

எனத் தம் நிலையை – உள்ளத்து உணர்வை – திட்டவட்டமாகவும் தெள்ளத் தெளிவாகவும் எடுத்துரைக்கின்றார் கவிஞர்.

*நிகர் என்று மனித குலம் நிமிர்ந்து நிற்க,*
*நிலம் முழுதும் சமத்துவமே நெறியென் றாக,*
*உல(கு) ஒன்று புதிதாக உருவம் செய்வோம்*[8]

என்னும் கவிஞர் கூற்றும் இவ் வகையில் நினைவுகூரத்தக்கதாகும்.

**முழுமையை நோக்கிய படைப்பாக்க முயற்சி**

குலோத்துங்கனின் கருத்தில் கவிதை என்பது சொற்சிலம்பம் ஆடுவது அன்று; கவிதை படைப்பது கல்லில் சிலை செதுக்குவது போன்றது; ஆழமுடைச் சிந்தனையோடு அழகுதமிழ்ச் சொல் சேர்த்துக் குறுகத் தறிப்பது.

*. . . . . . காலமெலாம்*
*கல்லில் சிலைசெதுக்கும்*
*கலைஞனைப் போல், யான் பழகும்*
*சொல்லில் புதியதமிழ்த்*
*துறைபடைக்கும் ஆவலுடன்*
*எழுதித் திருத்துபவன்...*

*பாடிப் புகழ்காண*
*ஒருகவிதை போதும்எனும்*
*உள்ளத்தன்; சொல் அமைந்தால்*
*இருவரியும் போதும்என*
*எண்ணுபவன்*[9]

எனத் தமிழ்ப் புத்தாண்டை (1982) ஒட்டிச் சென்னை அகில இந்திய வானொலி நிலையம் ஏற்பாடு செய்திருந்த கவியரங்கில் தலைமையுரை ஆற்றிய போது குறிப்பிட்டுள்ளார் குலோத்துங்கன். 'நாளெனக்குப் போதவிலை' என்னும் தலைப்பில் எழுதிய பிறிதொரு கவிதையிலும் தம் படைப்பாக்க முயற்சி குறித்துக் கூறியுள்ளார் கவிஞர்:

*என்று முழுமைபெறும் என்கவிதை? செய்தவரை*
*நின்று நிதானித்து நினைத்து வரி, வரியாய்ப்*

*படித்தேன்; பலவரிகள் பழுதென்று பட்டதனால்*
*அடித்தேன்; மறுபடியும் ஆரம்பக் கட்டத்தில்*

*தொடங்கினேன்; இம்முயற்சி தொடர்ந்து பலவருடம்*
*நடந்து வருகிறது நாளெனக்குப் போதவிலை*[10]

நின்று நிதானித்து நினைத்துப் படைத்தல், பழுதென்று மனத்திற்குப் பட்டால் அடித்துத் திருத்தி மீண்டும் எழுதுதல் என்னும் படிநிலைகளைக் கொண்டது கவிஞரின் படைப்பாக்க முயற்சி.

## இறைவனிடம் கவிஞர் வேண்டும் வரம்

'நான் ஒருவனே போதும்' என்ற ஒரு கவிதை போதும், ஆழ்ந்திருக்கும் குலோத்துங்கனின் உள்ளத்தைத் திறந்து காட்ட. அக் கவிதையின் தொடக்கத்தில் 'என்ன வரம் வேண்டும்?' எனக் கேட்ட இறைவனுக்குக் கவிஞர் கூறும் பதில்:

*இறைவனே நின்படைப்பில்*
*இருக்கின்ற எண்ணிறந்த*
*குறையெலாம் நீக்கிக்*
*குவலயத்தை யான் விழையும்*
*வடிவி லமைக்கின்ற*
*வாய்ப்பெனக்குத் தாராய்.*[11]

சிந்தனையில் அல்லும் பகலும் ஆய்ந்து கவிஞர் படைக்கத் துணிந்த புத்துலகம் – காண விழைந்த சமுதாயம் – இன்ப மயமானது; மாணச் சிறந்தது.

*என்*
*பயணம் பெரிது: செலும்*
*பாதை நெடிது*[12]

எனத் தம் பயணமும் பாதையும் பற்றிய தெளிந்த சிந்தனை கவிஞருக்கு உள்ளது.

'விரும்பும் பொருள் எதுவும் தானாக வீடு வந்து சேரும்' எனக் கருதும் எண்ணம் கவிஞரிடம் இல்லை. இதே போலத் தம்

நெடிய வாழ்க்கைப் பயணத்தின் துயரம் தவிர்க்கத் துணை தேடும் இயல்பும் கவிஞருக்கு இல்லை.

*என் படைக்கு*
*ஒரு சிலரும் போதும், நான்*
*ஒருவனே போதும்*[13]

எனத் தன்னம்பிக்கை ததும்பி நிற்கும் குரலில் முழங்குகின்றார் கவிஞர். கவிஞர் தாம் மேற்கொண்ட புனிதப் பணிக்குக் கூட்டம் சேர்க்க வேண்டும் எனக் கருதவில்லை; கொடி பிடித்துப் பின்தொடர்வோரும் தேவையில்லை எனக் கருதுகின்றார். நிறைவாக,

*அரிய பொருளெதையும்*
*தேடி யளிக்கச்*
*சிலர் போதும்; மற்றதனைக்*
*கூடிச் சுவைக்கக்*
*குவலயத்தை நாமழைப்போம்*[14]

என அக் கவிதையை முடிக்கின்றார் குலோத்துங்கன். 'சேர வாரீர் செகத்தீரே' என்பது போல், 'கூடிச் சுவைக்கக் குவலயத்தை நாம் அழைப்போம்' எனத் தாயுள்ளத்தோடு கவிஞர் கவிதையை நிறைவு செய்திருப்பது குறிப்பிடத்தக்கது.

**பீடுடைய நெஞ்சும் தவ வாழ்வும்**

'தியாக தீபம்' என்னும் நெடுங்கவிதை குலோத்துங்கனின் கவித்துவ ஆளுமை வளர்ச்சியில் மைல் கல்லாக விளங்கும் சிறப்பினைப் பெற்றதாகும். அக் கவிதை கவிஞரின் ஆழ்ந்த குடும்பப் பற்றினை மட்டுமன்றி, திண்ணிய கொள்கைப் பிடிப்பினையும் ஒருங்கே புலப்படுத்த வல்லதாகும். 'ஆண்மகனை மிஞ்சினை நீ' என வாழ்வில் எதற்கும் மனங்கலங்காத தம் தங்கையின் ஆளுமைப் பண்பினைப் போற்றும் கவிஞர்,

*பாரம் கண்டஞ்சாத*
*பகடுபோல் நின்றாய் நீ*[15]

என்னும் தேர்ந்த உவமையைக் கையாண்டு தங்கைக்குப் புகழாரம் சூட்டுகின்றார்.

*பெருமிதப் பகட்டுக்குத் துறையும் உண்டோ?* (புறம். 90)

என அதியமான் நெடுமான் அஞ்சியைப் போற்றி ஔவையார் பாடி யிருக்கும் புறநானூற்றுப் பாடல் இங்கே ஒப்புநோக்கத்தக்கதாகும்.

அப்பர் சுவாமிகளின் ஆளுமை வளர்ச்சியில் அவரது தமக்கை திலகவதியாருக்கு ஓர் இன்றியமையாத இடம் உண்டு.

அதுபோல் குலோத்துங்கனின் ஆளுமை வளர்ச்சியில் அவரது தங்கை முத்துலட்சுமி முதன்மையான இடத்தினைப் பெறுகின்றார்.

*பெரிதொன்று காண்ப மெனும்*
*பீடுடைய நெஞ்சினன் யான்*
*தரை வாழ்வில் நின்றாலும்*
*தவ வாழ்வை மேற்கொண்டேன்*[16]

'பீடுடைய நெஞ்சினன் யான்', 'தவ வாழ்வை மேற்கொண்டேன்' என்னும் கவிஞரின் அடிகள் அவரது ஆளுமைப் பண்பினை அடையாளம் காட்டுவன. "காலமெலாம் நெஞ்சத்தின் ஆணைவழி நின்றேன்"[17] எனக் கவிதையின் பிறிதோர் இடத்திலும் மொழிகின்றார் கவிஞர்.

பீடுடைய நெஞ்சுடன் வாழ்ந்த நெடுங்காலத் தவ வாழ்வின் போது கவிஞர் சந்திக்க நேர்ந்த சோதனைகள் ஆயிரம்; வேதனைகள் பல்லாயிரம். இவற்றை எல்லாம் 'உப்பக்கம் காண்பதற்கு'க் கவிஞருக்குப் பெரிதும் துணைநின்றவை அவரிடம் குடிகொண்டிருந்த 'தாழா உளம், கல்வி உரம், கொள்கை நலம்'[18] என்னும் முப்பெருஞ் செல்வங்களே ஆகும்.

*. . . . . . . . . . நாளும்*
*தானுயர் நிலைஎண் ணாது,*
*தலைமுறை வளர்த்து நிற்போர்*
*வானுயர் மனிதர்; அந்த*
*வளமுள தேயம் வாழும்*[19]

என்பது குலோத்துங்கம்.

**'மேலதினும் மேல தேடும் விழைவு'**

குலோத்துங்கன் தம் தனிவாழ்விலும் வாக்கிலும் விழுமியங்களுக்குத் (Values) தரும் மதிப்பு நிலத்தினும் பெரிது; வானினும் உயர்ந்தது; கடலினும் ஆழம் மிக்கது.

*யான்*
*நிலத்திடை தேவன்: எந்தன்*
*நெறியினில் தாழ்வ தில்லேன்*[20]

என்னும் கவிஞரின் கூற்று இவ்வகையில் குறிப்பிடத்தக்கது.

மனித வாழ்வில் பட்டம், பதவி, செல்வம், செல்வாக்கு முதலான எவையும் பெரிதில்லை; ஒருவன் தன் நிலையில் தாழாமை என்னும் அருங்குணம் ஒன்றே, அவன் மனிதன் என்பதற்கான உரைகல் ஆகும்.

*. . . . . . . . . . வாழ்வில்*
*பெறும்பொருள் பதவி ஏதும்*
*பெரிதல; நிலையில் தாழா*
*அருங்குணம் ஒன்றே மாந்தர்க்கு*
*அளவெனும் உரைகல் அம்மா!* [21]

என்பது கவிஞர் உணர்த்தும் வாழ்வியல் விழுமியம்.

அச்சம் ஒன்றில்லா வாழ்வு – எவர் தரினும் எதையும் ஏற்கா வண்மை – ஒருநாளும் தாழ்வு அறியாத நெஞ்ச ஏற்றம் – நாளும் உச்சத்தை அடைய நாடும் உள்ளம்; இவை நான்கும் சேர்ந்ததே கவிஞரின் நோக்கில் முழுமையான வாழ்வு ஆகும்.

'நிலையினில் தாழ்ந்து நிற்பது' என்கின்ற பேச்சுக்கே இடமில்லை; 'வாழுவது உண்டெனில் மாண்பொடு வாழுவம்'[22] என்னும் செம்மாந்த பண்புக்குச் சொந்தக்காரர் கவிஞர். அவரைப் பொறுத்த வரையில் மண்ணில் பிழைப்பதோ – மூச்சு விடுவதோ மட்டும் வாழ்க்கையன்று; கொள்கையும் அன்று. வாழ்க்கை என்பது ஒரு தவம்; வேள்வி.

*மேலதினும் மேல தேடும்*
*விழைவுடையார் மண்மீது விண்ணும் காண்பர்*[23]

என்பது கவிஞர் படைக்கும் வாழ்வியல் நூற்பா.

*அச்சமொன் றில்லா வாழ்வை*
*அடைகுவம்; அளித்த போதும்*
*பிச்சையொன் றேற்கா வண்மை*
*பெருக்குவம்; தாழ்ந்த தென்னும்*
*இச்சையொன் றறியா நெஞ்ச*
*ஏற்றமும் காண்போம்; நாளும்*
*உச்சமொன் றடைய நாடும்*
*உள்ளத்தைப் போற்றி வாழ்வோம்*[24]

எனத் தன்மைப் பன்மை நடையில் விழுமிய வாழ்வுக்கு வரைவிலக்கணம் வகுக்கின்றார் குலோத்துங்கன்.

**'எம் பணி மானிடர் ஏற்றம்'**

*'என் கடன் பணிசெய்து கிடப்பதே'* என்பது அப்பர் வாக்கு. அதனை அடியொற்றி, "எம்பணி மானிடர் ஏற்றம்" என இரத்தினச் சுருக்கமாக எடுத்துரைக்கின்றார் குலோத்துங்கன். மேலும் அவர்,

*எப்பொருளும், எவ்வுறவும் மானிடத்தின்*
*ஏற்றம்போல் என்மனதை ஈர்த்த தில்லை*[25]

என்னும் ஒப்புதல் வாக்குமூலத்தினை அளிக்கின்றார்.

'வையம் தரும் இன்பம் வானம் தருவதில்லை' என்பது குலோத்துங்கனின் உயிர்க் கொள்கை. 'இறவாதிருப்பது எனில் ஏற்பேன்; இறந்தால் யான் பிறவாதிருத்தல் பெறல் வேண்டேன்' எனத் திட்டவட்டமாக உரைக்கின்றார் அவர். கவிஞரின் நோக்கில் வையகத்தின் காட்சிகள் தரும் கோடி இன்பம் – மானுடர்தம் ஆட்சி – மனத்திற்கு மகிழ்ச்சியூட்டும் மண்ணின் கனவுகள்: இவற்றுக்கு ஈடுஇணை வேறு எவையும் இல்லை. முத்தாய்ப்பாக,

*மீண்டும் பிறப்பேன்; இம்*
*மேதினியின் யாத்திரையில்*
*யாண்டும் நடப்பேன்; எம்*
*யாத்திரையைக் காவியமாய்ப்*
*பாடுவதில் யானடையும்*
*பரவசத்தை யாரறிவார்?*[26]

எனத் தம் உரத்த சிந்தனையைப் பறைசாற்றுகின்றார் கவிஞர்.

**சாதனைப் பாதையில் தளராது நடை பயிலல்**

மனித வாழ்வில் எத்தனை எத்தனையோ அனுபவங்கள் நேரலாம்; துன்பங்கள் தாக்கலாம்; தொல்லைகள் தொடரலாம்; சிக்கல்கள் நெருக்கலாம்; பிரச்சினைகள் இறுக்கலாம்; சோதனைகள் சுற்றிச் சூழலாம். எதன் பொருட்டும் மனிதன் தன் வலிமையை இழக்கக் கூடாது என்பதில் உறுதியாக இருக்கின்றார் குலோத்துங்கன். நடைமுறையில் வழங்கும் ஒரு பழமொழியினைக் கொண்டு இக்கருத்தினை விளக்குகின்றார் அவர். 'வளர்த்த கடா மார்பில் பாயும்: இது வையகம் கண்ட அனுபவம்.' அதனையும் மன வலிமையுடன் ஒருவர் எதிர்கொள்ள வேண்டும் என அறிவுறுத்துகின்றார் கவிஞர். 'பட்டறிவின் படிப்பினை' என்னும் தலைப்பில் எழுதிய கவிதையில் அவர் இளைய தலைமுறையினருக்கு உணர்த்தும் வாழ்க்கைப் பாடம் இது:

*வெயர்வு சிந்தி வெற்றிப் பாதையில்*
*முயன்று சென்றுநீ முடியும் சூடினால்*
*உலகம் உனக்கு வைத்திருக்கும் பரிசுகள்*
*ஒன்றல்ல: இரண்டல்ல: மூன்று:*
*உதட்டளவில் பாராட்டு: உள்ளத்தில் பொறாமை:*
*ஒருசிலர் பகைமை: அதனால் என்ன?*
*சாதனைப் பாதையில் தளராது நட*[27]

'தொழுத கையுள்ளும் படை ஒடுங்கும்' (திருக்குறள் 828) என்றபடி, உதட்டளவில் பாராட்டுவார்கள்; ஆனால் அவர்களின்

உள்ளத்தின் ஆழத்தில் பொறாமை கனன்று கொண்டிருக்கும். ஒரு சிலர் வெளிப்படையாகப் பகைமை பாராட்டவும் செய்வார்கள். எதைப் பற்றியும் கவலைப்படாமல் சாதனைப் பாதையில் தளராது நடை பயில்வதையே குலோத்துங்கன் தம் கொள்கையாகவும் குறிக்கோளாகவும் வாழ்விலும் வாக்கிலும் எப்போதும் முன்னிறுத்தியுள்ளார்; இன்றளவும் வாழ்ந்து காட்டியும் வருகின்றார்.

## குறிப்புகள்

1. இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதை, ப. 70.
2. பாரதியார் கவிதைகள், ப.233.
3. 'குலோத்துங்கன் கவிதைகளும் குழந்தைசாமியும் – ஒரு முன்னுரைக் குறிப்பு', குலோத்துங்கன் கவிதைகள், ப.44.
4. பாரதியார் கவிதைகள், ப.10.
5. பாரதிதாசன் கவிதைகள், ப. 158.
6. குலோத்துங்கன் கவிதைகள், ப.80.
7. மேலது.
8. மேலது, ப.207.
9. மேலது, ப.605.
10. மேலது, ப.94.
11. மேலது, ப.115.
12. மேலது, ப.117.
13. மேலது.
14. மேலது.
15. மேலது, ப.658.
16. மேலது, ப.660.
17. மேலது, ப.661.
18. மேலது, ப.524.
19. மேலது, ப.525.
20. மேலது, ப.133.
21. மேலது, ப.200.
22. மேலது, ப.285.
23. மேலது, ப.266.
24. மேலது, ப.233.
25. மேலது, ப.128.
26. மேலது, ப.165.
27. மேலது, ப.144.

# 2. கவிதைப் பரிமாணங்கள்

தமிழ் மொழி மெய்ஞ்ஞானத்துடன் நெருங்கிய தொடர்புடையது என்பது அனைவரும் அறிந்ததே. ஆனால், விஞ்ஞானத்தையும் ஏவல் கொள்ளும் திறன் தமிழுக்கு இருக்கிறது என்பதை நம் குலோத்துங்கன் மூலந்தான் அறிகிறோம்.

—ம.பொ.சிவஞானம்[1]

ஆன்றவிந்து அடங்கிய ஒரு கொள்கைச் சான்றோராய்த் தமிழ் கூறு நல்லுலகில் வலம் வந்து கொண்டிருக்கும் டாக்டர் வா.செ.குழந்தைசாமி, திருச்சி (தற்பொழுது கரூர்) மாவட்டத்தில் வாங்கலாம்பாளையம் என்ற சிற்றூரில் பிறந்தவர் (14.07.1929). எழுத்தறிவு இல்லாத ஓர் எளிய விவசாயக் குடும்பத்தில் பிறந்த அவர், பின்னாளில் மூன்று பல்கலைக்கழகங்களில் பல்லாண்டுக் காலம் துணைவேந்தராகப் பணியாற்றும் உயர்வினைப் பெற்றார். பிறந்த சிற்றூரில் இருந்த திண்ணைப் பள்ளி, கரூர் நகராண்மைப் பள்ளி, சேலம் நகராண்மைக் கல்லூரி, காக்கிநாடா பொறியியல் கல்லூரி ஆகியவற்றில் பயின்ற அவர், பிற்காலத்தில் தேசிய அளவில் மட்டுமன்றி, உலக அளவில் நீர் வளத் துறையில் (Hydrology) தனிப்பெருஞ் சாதனை படைத்தார். புதுதில்லி சாகித்திய அக்காதெமி விருது (1988), தமிழக அரசின் 'திருவள்ளுவர் விருது' (1999), நடுவண் அரசு வழங்கும் 'பத்மஸ்ரீ விருது' (1992), 'பத்ம பூஷண் விருது' (2002) முதலான பற்பல விருதுகளும், பிஎச்.டி., டி.லிட்., டி.எஸ்சி. முதலான பற்பல மதிப்புறு பட்டங்களும் தகுதியும் புலமையும் காரணமாக அவரைத் தேடிச் சரணடைந்தன. பொறியியல் வல்லுநர் வா.செ.குழந்தைசாமி, 'குலோத்துங்கன்' என்ற புனை பெயரில் ஒரு கவிஞரும் ஆவார். 'குலோத்துங்கன் கவிதைகள்' (2002) என்னும் தலைப்பில் அவரது 261 கவிதைகள் பதினெட்டு உட்தலைப்புக்களில் பகுக்கப்பெற்று நூல் வடிவில் வெளி வந்துள்ளன. "கவிதைப் பொருள்/கூற்று நிலையிற் பார்க்கும்பொழுது, இவர் கவிதைகள் பாரதியார், பாரதிதாசன் மரபில் வருவதை இத்திரட்டைப் பார்த்தவுடனேயே தெரிந்து கொள்ளலாம்"[2] என்பது குலோத்துங்கன் கவிதைகள் பற்றிய பேராசிரியர் கார்த்திகேசு சிவத்தம்பியின் மதிப்பீடு ஆகும். இனி, குலோத்துங்கனின் கவிதைப் பரிமாணங்கள் குறித்து இவ்வியலில் காணலாம்.

## அரும்பண்புகளின் அழகிய சங்கமம்

டாக்டர் வா.செ.குழந்தைசாமியின் வாழ்வும் வாக்கும் இன்றைய தலைமுறையினருக்கு ஓர் எடுத்துக்காட்டாக அமைவன. அவரது ஆளுமை (Personality) அரிய பண்புகள் பலவற்றின் அழகிய சங்கமம்; கவியரசர் பாரதியின் சொற்களிலே சுட்டுவது என்றால், 'கூட்டுக் களி' (Synthesis). அவர் எழுத்து, பேச்சு என்னும் இரு கலை வடிவங்களையும் திறம்படக் கையாண்டவர்; இலக்கியம், அறிவியல் என்னும் இரு துறைகளிலும் அழுத்தமாகத் தடம் பதித்தவர்; படைப்பாளி, ஆய்வாளர் என்னும் இரு நிலைகளிலும் சிறந்து விளங்கியவர்; கல்வியாளர் (Academic), ஆட்சிப் பொறுப்பாளர் (Administrator) என்னும் இரு பதவிகளிலும் கருத்துடன் பணியாற்றி நற்பெயர் பெற்றவர்; தமிழ், ஆங்கிலம் என்னும் இரு மொழிகளிலும் எடுப்பாகப் பேசவும் எழுதவும் வல்லவர். அவரது வாழ்வும் வாக்கும் இன்றைய தலைமுறையினருக்கு உணர்த்தும் இரத்தினச் சுருக்கமான செய்தி (Message) இதுதான்:

*முயற்சி உண்டெனின் முழுமை காணுவம்!*[3]

## தன்முன்னேற்றச் சிந்தனைகளின் பெட்டகம்

ஷிவ் கேராவின் 'நீங்களும் வெற்றி பெறலாம்' (You Can Win) என்ற நூல் அறிவுலகில் பலராலும் பரவலாகப் – பரபரப்பாகப் – பேசப் பெற்றது; ஆயிரக் கணக்கில் விற்பனையும் ஆயிற்று. அந்த நூலுக்கு இணையான – ஏன், ஒரு படி மேலான – சீரும் சிறப்பும் வாய்ந்த தன்முன்னேற்றச் சிந்தனைகளைத் தன்னகத்தே கொண்ட நூல்கள் பலவற்றைக் கவிதையிலும் உரைநடையிலும் வடித்துத் தந்துள்ளார் வா.செ.குழந்தைசாமி.

*இயலும் என்பவர்க்கு எதுவும் அரிதல!*
*எழுந்து நிற்பவர்க்கு இமயம் தடையல!*[4]

என்னும் அவரது தாரக மந்திரம் படிப்பவரைத் தன்வயப்படுத்தும் திறம் படைத்ததாகும்.

மனிதன் தன் வாழ்வில் சந்திக்கும் தோல்விகளால் துவண்டு விடக் கூடாது; சோதனைகளைக் கண்டு சோர்ந்து விடக் கூடாது. வள்ளுவர் 'முயற்சி கூலி தரும்' என்று மட்டும் சொல்லவில்லை; 'முயற்சி மெய் வருத்தக் கூலி தரும்' (திருக்குறள் 619) என்று அவர் பாடியிருப்பது ஆழ்ந்து சிந்திக்கத் தக்கது. இவ்வளவு ஏன்? இயற்கையை உற்று நோக்கினாலே உண்மை விளங்கும். கலப்பையைக் கொண்டு கீறினால் தானே

நிலத்தில் விளைபொருள் கிடைக்கிறது? தோண்டினால் தானே ஊற்று நீர் கிடைக்கிறது? வெட்டினால் தானே ஆற்றல்சேர் நிலக்கரியும் அணிசெய் தங்கமும் கிடைக்கின்றன? பிளந்தால் தானே அணுவின் ஆற்றல் வெளிப்படுகிறது? இவை எல்லாம் எதை உணர்த்துகின்றன?

*இயற்கை அன்னையே!*
*தன்னையும் வருத்தித் தாழாது உழைத்து*
*உன்னையும் வருத்தினால் தானே உதவுகிறாய்*
*இதுஉன் குணமா அல்லது கொள்கையா?*[5]

என இயற்கை அன்னையிடமே சிந்தனையைத் தூண்டும் சீரிய வினா ஒன்றினைத் தொடுக்கிறார் கவிஞர் குலோத்துங்கன். 'ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித், தாழாது உஞற்று பவர்' (குறள் 620) என்னும் வள்ளுவர் வாக்கு இவ்வகையில் அவருக்குப் பெரிதும் உதவியுள்ளது.

**இயற்கை அன்னையிடம் கவிஞர் இறைஞ்சும் வரம்**

இயற்கை அன்னையிடம் குலோத்துங்கன் இறைஞ்சும் பெருவரம் ஒன்று உண்டு. அது வருமாறு:

*அயரும் பொழுதில்எம் இதயத்தில், நீ*
*ஆசையின் தீயெழ அருள்செய்வாய்!*[7]

'சுமையைக் குறை' என அவர் இயற்கை அன்னையைத் தொழவில்லை; 'எம் தோள்வலி பெறத் துணை செய்' என்றே தொழுகின்றார். 'இமயச் சிகரம்' எவ்வளவு வளர்ந்தாலும் அவருக்குக் கவலை இல்லை. 'தொடர்ந்து ஏறும் வலிமை எம் கால் பெறட்டும்!' என்றே அவர் வேண்டுகின்றார். 'துயரம் தவிர்' என அவர் தொழுது வேண்டவில்லை; 'இதயத்தில் எக்கணமும் சுடர்விட்டு நிற்கும்' ஆசைத் தீயையே அவர் வேண்டுகின்றார்!

*பெரிதெனப் படுப வற்றுள்*
*பெரிதினைத் தாங்கும் தோள்கள்*
*அரிதெனும் யாவி னுள்ளும்*
*அரிதினைத் தேடும் நெஞ்சம்*
*பூரணம், பூர ணத்தின்*
*பொலிவினை விழையும் ஞானம்...*
*ஈண்டுஎமக்கு அருள்வை அன்னாய்*
*ஈன்றவள் மறுப்ப துண்டோ?*[8]

என இயற்கையன்னையிடம் உருக்கமாக வேண்டுகிறார் கவிஞர். 'இவை அருள்வதில் உனக்கு எதுந் தடையுளதோ?' (பாரதியார்

கவிதைகள், ப.75) எனப் பராசக்தியிடம் பாரதியார் உரிமையோடு கேட்பது போல், குலோத்துங்கனும் 'ஈன்றவள் மறுப்ப துண்டோ?' என உரிமையோடு கேட்கின்றார்.

இறைவனிடமோ இயற்கை அன்னையிடமோ சின்ன வரம் கேட்கும் இயல்பு கவிஞரிடம் எப்போதும் இல்லை. அவர் கேட்பதெல்லாம் பெரிய வரங்களே. ஓர் எடுத்துக்காட்டு:

*ஆண்டவன் உள்ளா னாயின்*
*பெறும் வரம்: கடவுள் என்னும்*
*பெருமன்யா னாக வேண்டும்.*[9]

இவ்வரம் கவிஞரின் தனித்தன்மையினையும் ஆளுமைப் பண்பினையும் ஒருங்கே புலப்படுத்த வல்லதாகும்.

**வாழ்வியல் தத்துவம்**

*நெருநல் உளன்ஒருவன் இன்றுஇல்லை என்னும்*
*பெருமை உடைத்துஇவ் வுலகு* (336)

என்பது 'நிலையாமை' அதிகாரத்தில் இடம்பெறும் ஓர் அரிய குறட்பா. அடிக்கடி எழுத்துலகில் – பேச்சு மேடையில் – மேற்கோளாக எடுத்தாளப்பெறும் குறட்பா இது. ஆயின், இதுவரை எவரும் இக் குறட்பாவின் உண்மைப் பொருளை முற்றிலுமாக உணர்ந்த தாகத் தெரியவில்லை; உரைத்ததுமில்லை. இக் குறட்பாவினை அடிப்படையாகக் கொண்டு 'பொய்யாப் புலவனின் புதிர்' என்னும் தலைப்பில் ஒரு கவிதை படைத்துள்ளார் குலோத்துங்கன்.

*நெருநல் உள்ளவன் இன்றில்லை என்பதில்*
*பெருமைஎன்? வள்ளுவர் பேச்சின் பொருள் என்?*[10]

என்னும் பொருள் பொதிந்த வினாக்களுடன் தொடங்குகின்றது அக்கவிதை.

கலையில், கல்வியில், கற்பனைத் திறனில் மலையென நின்றவன் ஒருவன். வையமே கண்டு வியந்த மாண்பினை உடையவன் அவன். விண்ணும் மண்ணும் பயன்பெறு வாழ்வு வாழ்ந்தவன் அவன். ஆனால் 'கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந்தார்' என்றபடி, 'படுத்தான், மாய்ந்தான்' என்ற அளவில் பட்டென்று முடிந்தது அவனுடைய வாழ்க்கை. இதே போல, ஒருவர் தம் வாழ்நாளில் உலகம் கண்டன யாவினும் நுழைந்து, காலம் முழுவதும் கற்றன அனைத்தும், 'விசையினை அழுத்த, விளக்குகள் யாவும் அசைவெதுவும் இல்லாது அணைவது போன்று' மறைந்தன; கண் மூடித் திறக்கும் ஒரு கணத்தினில் மானிட வளங்கள் அனைத்தும் முடிவுற்றன. 'நெஞ்சம் குமுறும்

இவ்விழப்பில் விளங்கும் பெருமை என்ன? வள்ளுவர் பேச்சின் பொருள் என்ன?' என வினவுகின்றார் கவிஞர்.

ஆண்டுகள் பல வருந்தி முயன்று நாம் சிறுகச் சிறுக ஈட்டிய திறன்கள் எல்லாம் இமைக்கும் பொழுதில் காட்டினில் தீப்பற்றி மரங்கள் எரிந்து சாம்பலாவது போல் இறப்பின் மூலம் முடிவுக்கு வருகின்றனவே, இது கொடுமை அல்லவா?

இங்ஙனம் தம் நெஞ்சில் எழுந்த சிக்கலான வினாக்களுக்கு விடை காண முடியாத நிலையில்,

*புலவரில் தலைமகன், பொய்யா மொழியினன்*
*உலகியல் வாழ்வதன் ஊற்றினைத் தொட்டவன்*
*பெருமை கண்டதென்? பெருந்தகை கூற்றின்*
*பொருள் என்? தத்துவப் புலவர் சொல்வரோ?*[11]

எனக் கேட்டு அக் கவிதையை நிறைவு செய்கின்றார் கவிஞர்.

*ஆன்ற தமிழ்ப் புலவீர், கற்பனையே யானாலும்*
*வேதாந்த மாக விரித்துப் பொருளு ரைக்க*
*யாதானுஞ் சற்றே யிடமிருந்தாற் கூறீரோ*[12]

எனக் 'குயில் பாட்'டின் இறுதியில் பாரதியார் ஆன்ற தமிழ்ப் புலவர்களை நோக்கிக் கேட்டது போல, குலோத்துங்கன் 'தத்துவப் புலவர் சொல்வரோ?' என்னும் வினாவுடன் கவிதையை முடித்துள்ளார்.

**நகைச்சுவையும் அங்கதச் சுவையும்**

பாவேந்தர் பாரதிதாசனின் 'உலகப்பன் பாட்டி'னை நினைவூட்டும் வண்ணம் கவிஞர் குலோத்துங்கன் பாடியிருக்கும் கவிதை 'அரசியல்வாதி பாட்டு.' இன்றைய அரசியல்வாதியின் கூற்றாக அமைந்திருக்கும் இக் கவிதை, மெல்லிய நகைச்சுவையும் கூர்மையான அங்கதச் சுவையும் கை குலுக்கிக் கொள்ளும் ஒரு சுவையான கவிதை ஆகும்.

*நாற்காலி யாம்கண்ட தெய்வம் – அதனை*
*நாள்தோறும் வழிபடுதல் நாம்காணும் இன்பம்*[13]

என உரத்த குரலில் அரசியல்வாதி முழங்குவதுடன் அக்கவிதை தொடங்குகின்றது. அரசியல்வாதியைப் பொறுத்தவரையில் நாற்காலி என்பது வெறும் மரத்தினால் செய்த ஒரு பொருள் மட்டும் அன்று; 'சிம்மாதனம்', 'திருவெலாம் தருகின்ற திரு' என்றெல்லாம் புகழாரம் சூட்டிவிட்டு, தொடர்ந்து அதனுள் மறைந்து கிடக்கும் சக்தியின் மர்மங்களைத் தமக்கே உரிய பாணியில் எடுத்துக்காட்டுகின்றார் கவிஞர். மேலும் அரசியல்வாதி அன்றாடம் வழிபடும் கோயில் எது தெரியுமா? 'நாற்காலி உள்ள

அறை' தானாம்! அங்கு நாள்தோறும் வரம் நாடி இரவுபகல் என்று பாராமல் பக்தர் குழுக் கூட்டம் படையெடுக்குமாம்! அவர்களுள் 'பசையுள்ளவர்களின் காணிக்கை'க்குத் தனிமதிப்பும் மரியாதையும் உண்டாம்! முத்தாய்ப்பாகக் கவிதையின் முடிவில்,

*நாற்காலி வாழ்க எனப் பாடு – அஃது*
*நமதன்றி வேறொருவர்க்கு இலையென்று ஆடு!*[14]

என்று தம் திட்ட அறிக்கையைத் தெள்ளத் தெளிந்த நடையில் வெளியிடுகின்றார் அரசியல்வாதி! அவரது கருத்தியலில் 'செல்வம் எவ்வழியில் வரினும் அதன் எடை குறைவதில்லை.' அவர் ஏற்காத பதவி எதுவும் இல்லை. எப்போதும் தோற்காது வெல்லுவது அவரது திட்டம். 'எங்கள் சொல்லுக்கு மாறாகத் தும்முவதும் குற்றம்' என்பது அவரது வாதம்!

## குறியீட்டுத் திறம்

கவிஞர் குலோத்துங்கனின் 'குஞ்சுகளின் கோரிக்கை' அவரது 'முத்திரைக் கவிதை' எனக் குறிக்கத்தக்க சிறப்பு வாய்ந்தது. குறியீட்டுத் திறம் விளங்கக் கவிஞர் செதுக்கித் தந்திருக்கும் சீரிய கவிதை அது. குஞ்சுகள் தாய்ப் பறவையிடம் விடுக்கும் உருக்கமான 'ஐந்து அம்சக் கோரிக்கை' இதுதான்:

1. எங்களுக்கு நீங்கள் இறக்கையைக் கொடுங்கள். இனிமேல் வானத்தில் இடமில்லை என்று கூறாதீர்கள். இடம் இருக்கும் உயரம் வரை நாங்கள் எழும்புவோம்.

2. எங்கள் கையில் விளக்கைக் கொடுங்கள். எங்கும் நிறைந்துள்ளது இருட்டென்று கூறாதீர்கள். இருள் தாண்டும் வரை நாங்கள் தொடர்ந்து நடப்போம்.

3. கப்பல் இல்லையெனில் கட்டுமரம் கொடுங்கள். கடலலைகளின் பயங்கரம் பாடிக் கலங்கச் செய்யாதீர்கள். காற்றே பொறியாய்க் கைகளே துடுப்பாய் நாங்கள் கரை சேருவோம்.

4. காண வேண்டிய இலக்கின் திசையைக் காட்டுங்கள். கல்லும் முள்ளும் நிறைந்த பாதை என்று கவலைப்படாதீர்கள். காடும் கடந்து நதியும் நீந்தி மலையும் ஏறுவோம் நாங்கள்.

5. எங்களைத் தேடவும், தேடித் திரியவும் விடுங்கள். இதுவரை கண்டதன் பெருமை பேசியே காலம்

> கழிக்காதீர்கள். எங்கள் தேடலுக்கு எத்தனையோ உலகங்கள் காத்திருக்கின்றன.[15]

இக் கவிதை சுட்டும் குஞ்சுகள் இளைய தலைமுறையினர்; தாய்ப் பறவை பெற்றோர். பெற்றோர் அனைவரும், இளைய தலைமுறையினர் ஒவ்வொருவரும் தங்கள் சிந்தை மடலில் என்றென்றும் ஒரு கல்வெட்டாய்ப் பொறித்து வைத்துப் பாதுகாக்க வேண்டிய அற்புதமான கவிதை இது.

> உங்கள் குழந்தைகள், உங்கள் குழந்தைகள் அல்ல. அவர்கள் உங்கள் வழியாக வரலாம், உங்களிடமிருந்து வரவில்லை. ஆகவே அவர்களுக்கு உங்கள் அன்பைக் கொடுங்கள்; உங்கள் எண்ணத்தை அவர்கள் மீது சுமத்தாதீர்கள். காரணம், அவர்கள் தங்கள் எண்ணங்களோடு இந்த உலகத்திற்கு வருகிறார்கள். உங்கள் குழந்தைகள் உங்கள் குழந்தைகள் அல்ல. வாழ்க்கை தனக்குத் தானே தவித்துக் கொள்ளுகிற ஏக்கத்தின் எச்சங்கள் அவர்கள்

என்னும் கலீல் ஜிப்ரானின் சிந்தனை இங்கே ஒப்புநோக்கி மகிழத்தக்கதாகும்.

### நோக்குக் கோட்பாடு

> *மாத்திரை முதலா அடிநிலை காறும் —*
> *நோக்குதற் காரணம் நோக்கெனப் படுமே*

என்பது தொல்காப்பியச் செய்யுளியல் நூற்பா (1361). 'நோக்கு' என்பது தொல்காப்பியர் குறிப்பிடும் தமிழ்முறைத் திறனாய்வு, வெறும் 'நயம் பாராட்டுதல்' அன்று இது. உள்நுழைந்து ஊடுருவி நுண்ணிய நயங்களைத் தேடிக் கண்டுபிடித்தலை இது உணர்த்தும். குலோத்துங்கன் கவிதைகளில் 'நோக்கு' எனத் தொல்காப்பியர் குறிப்பிடும் கோட்பாடு சிறப்பாக அமைந்துள்ளதைக் காண முடிகின்றது.

> சிறந்த கவிதைக்கு இலக்கணம் படித்து முடித்த பிறகும் நம் நினைவில் ரீங்காரமிட்டுக் கொண்டிருக்கும் கருத்து, சொல், தொடர்கள் மூலம் திரும்பத் திரும்ப உணரப்படும் தன்மையாகும். குலோத்துங்கத் தொடர்கள் பல – பாடலடிகள் பல – நினைவில் நிற்பன; நிற்க வேண்டுமெனும் ஆர்வத்தைத் தூண்டுவன[16]

என்பர் பேராசிரியர் தமிழண்ணல். இவ் வகையில் படிப்பவர் நெஞ்சில் – நினைவில் – நிலைத்து நிற்கும் குலோத்துங்கத் தொடர்கள் – அடிகள் – சில இதோ:

*சிந்தையின் வளத்தில் செழிப்பது நாகரிகம்*[17]

*பேசும் நாவசைத்து நாடசைக்கும் கவிஞர்கள் நாங்கள்*[18]

*கவிஞனின் கனவுகள் காவியம் படைக்கும்*
*காதலர் கனவுகள் வாழ்வியல் வளர்க்கும்*[19]

*கல்வி தரும் வீறு பெரிது*[20]

*அரைநொடி நேரம் நின்றோம் யாம் – இவண்*
*ஆயிரம் காதம் பின்னடைந்தோம்*[21]

*காதலர் முறுவல் மிஞ்சும்*
*கவின்பொருள் உலகில் இல்லை*[22]

*எல்லாம் செய்தோம், ஏதுமற்றோம், வாழ்ந்தறியோம்*
*ஏழை நாங்கள்!*[23]

*எதிர்காலத்தை ஊடுருவி அறியாதார்*
*உயர்வதில்லை*[24]

*பெண்மை எனப்படும் காவியம் – புவி*
*பேணும் வலிமையின் பெட்டகம்*[25]

*வறுமைக்குச் சிரஞ்சீவி வரம்தான் உண்டோ?*[26]

*. . . . பசியொடு கூட்டுக் குடும்பம்*
*நெடிதுகண்டு தன் நிழலென வறுமையை ஏற்பவன்*[27]

*இசைபரவ வாழ்ந்தவர்கள் இறப்பதில்லை*
*எங்கள் தமிழ்க் கொள்கை இது*[28]

*இம்மா நிலத்தில் இனியான் மனங்குளிர*
*'அம்மா' என அழைக்க யாருள்ளார்?*[29]

*. . . . . . கண்சொரிந்த*
*கங்கையால் புனித னானேன்*[30]

இப்படி எத்தனை எத்தனையோ திரும்பத் திரும்ப நினைவுக்கு வரும் தொடர்களும் அடிகளும் குலோத்துங்கன் கவிதைகளில் மண்டிக் கிடக்கின்றன.

'புதுவைத் தமிழ்க் குயில்' என்பது குலோத்துங்கன், கவிதை வடிவில் பாவேந்தர் பாரதிதாசனுக்குச் சூட்டியிருக்கும் புகழாரம். பாவேந்தரின் புகழ் பெற்ற படைப்புக்களின் பெயர்களைக்

கொண்டே இப் பாமாலையைக் கவிஞர் தொடுத்திருக்கும் திறம் பயில்வார் நெஞ்சை அள்ளுவதாகும்.

*இன்னிசையின் சுவைபிழிந்து இசையமுதாய்*
*வழங்கிவிட்டாய், இருண்ட வீட்டில்*
*வெண்ணிலவை நிகர் குடும்ப விளக்கேற்றித்*
*தமிழியக்கம் விதைத்தாய்: உன்கண்*
*முன்இயற்கை அழகாகச் சிரித்தாள்: பாண்*
*டியன் பரிசால் முத்தமிழ்த் தாய்*
*புன்னகைபூத்து இன்புற்றாள்; புத்துலகப்*
*பாவரசே வாழி வாழி!*[31]

'இசையமுது', 'இருண்ட வீடு', 'குடும்ப விளக்கு', 'தமிழியக்கம்', 'அழகின் சிரிப்பு', 'பாண்டியன் பரிசு' என்னும் பாவேந்தரின் நூற்பெயர்களை இங்கே நயம்படப் பயன்படுத்திக் கொண்டுள்ளார் கவிஞர்.

**கவிஞருக்கு வலது கரமாய்ப் பணிபுரியும் உவமைகள்**

கவிதைக் கன்னிக்கு மணமும் மலர்ச்சியும்
அளிக்கும் வாசனைத் திரவியம் உவமையே.
உவமையற்ற கவிதை உப்பற்ற கறிக்குச் சமம்.
கவிஞன் கையாளும் உவமையே அவன் கற்பனை
வளத்துக்குச் சாட்சி கூறும். கவிதைக்கு
வலக்கை போல் பணிபுரிவது உவமையே[32]

என்பர் அறிஞர் க.வீரகத்தி. இக் கருத்திற்கு இலக்கியமாக விளங்க வல்ல குலோத்துங்கனின் உவமைகள் சிலவற்றை இங்கே காணலாம்.

மானிடம் பிளவுபட்டு நிற்கும் காட்சிக்குக் கவிஞர் கையாண்டிருக்கும் உவமை வித்தியாசமானது:

*கரிசல் வயல்நிலம் வெடிப்பதுபோல் – நம்*
*கண்முன் மானிடம் பிளக்கிறது*[33]

கவிஞரின் பட்டறிவு இங்கே ஒரு சிறந்த உவமை தோன்றுவதற்குத் துணைபுரிந்திடக் காண்கிறோம்.

*எத்திசை யாயினும்*
*ஏழையர் தம்நிலை*
*மத்தளம் போல்இரு*
*மருங்கும் நொந்தது*[34]

என்பது ஏழையர் தம் அவல நிலையைச் சித்திரிப்பதற்குக் கவிஞர் கையாண்டுள்ள நல்லதோர் உவமை. இங்கே 'உரலுக்கு

ஒரு பக்கம் இடி; மத்தளத்திற்கோ இரு பக்கமும் இடி' என்னும் நாட்டுப்புறப் பழமொழியை நயமுறப் பயன்படுத்திக் கொண்டுள்ளார் கவிஞர்.

தந்தையின் எதிர்பாராத இறப்பால் எட்டுத் திசைகளிலும் இருள் சூழ்ந்து நிற்கக் குடும்பம் உற்ற பதைபதைப்பினைப் புலப்படுத்துவதற்கு,

*. . . . வானிடிந்து*
*கட்டோடு வீழ்ந்தது போல்,*
*கல்லின் மேல் கண்ணாடி*
*பட்டுத் தெறித்தது போல*[35]

என்னும் இரு அழகிய உவமைகளை அடுக்கிக் கையாண்டுள்ளார் கவிஞர்.

பாராட்டை மிஞ்சும் ஒரு பரிசும் இல்லை; பதவி, பணம் எதுவும் அதற்கு இணையும் இல்லை. சான்றோர்கள் மனம் திறந்து பாராட்டும் தகுதிச் சொற்களுக்குக் கவிஞர் கையாண்டிருக்கும் அழகிய உவமை இது:

*உள்ளத்தின் ஊக்கத்திற்(கு)*
*ஊட்டம் சேர்க்கும்*
*சத்துணவு போன்றதடா*
*மனம் திறந்து*
*சான்றோர்கள் பாராட்டும்*
*தகுதிச் சொற்கள்*[36]

சான்றோர்கள் பாராட்டும் தகுதிச் சொற்களுக்குப் – பாராட்டு மொழிகளுக்கு – ஊட்டம் சேர்க்கும் சத்துணவை உவமை காட்டி இருக்கும் கவிஞரின் சதுரப்பாடு பாராட்டத்தக்கதாகும்.

*மழைகண்ட மயிலன்ன எனது நெஞ்சம்*
*மலர்கின்ற கனவுகளில் மகிழும்*[37]

*கறக்கின்ற பாலனையத் ததும்பி நிற்கும்*
*கவிதையுளம்*[38]

*குளமுறையும் தவளையென நமக்குள் நாமே*
*குலம்பெருமை பேசுவதும் கொடுமை யன்றோ!*[39]

பால்நுரை யன்ன வெள்அருவியின் புனலில்[40]

*ஊற்றுநீர் போல் தெளிவுடைய சமுதாயம் செய்ய வந்தோன்*[41]

என்றாற் போல் பொருத்தமான சின்னஞ்சிறு உவமைகளைக் கையாண்டு தம் கருத்தினைத் திறம்படப் புலப்படுத்துவதில் வெற்றி கண்டுள்ளார் குலோத்துங்கன்.

**மானுடத்தின் கையறு நிலைக் கதறல்கள்**

வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடும் கருணை மனம் கொண்டவனே கவிஞன் ஆவான். அவன் எல்லா உயிரும் இன்புற்று இருக்கவே நினைப்பான்; பசித்தோர் முகம் பார்த்து மனம் இரங்கிப் பாடுவான்; 'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' எனத் தாயுள்ளத்தோடு எண்ணுவான்; அடுத்தவர் துயர் துடைக்க ஆங்கே 'உடுக்கை இழந்தவன் கை போல' விரைந்து எழுவான். ஈழத் தமிழர் படும் பெருந் துயரினை எண்ணும்போது குலோத்துங்கனின் உள்ளம் பாகாய் உருகுகின்றது.

*பொங்கி நெஞ்சம் புழுங்கி யழிந்தனம்;*
*புன்மை புன்மை இப்புன்மையை வையகம்*
*எங்ஙனம் பொறுக் கின்றதோ? தெய்வமே*
*ஈழவர்துயர்க் கெல்லையொன் றில்லையோ?*[42]

என நெஞ்சு பொறுக்காமல் தெய்வத்திடமே முறையிடுகின்றார் கவிஞர். பிஜித் தீவிலே நம் பெண்கள் படும் பாட்டினைக் குறித்துப் பாடும் போது, 'அவர் விம்மி விம்மி விம்மி விம்மி அழுங்குரல் கேட்டிருப்பாய் காற்றே' (பாரதியார் கவிதைகள், பக். 222–223) என 'விம்மி' என்ற சொல்லினை நான்கு முறை அடுக்கிக் கையாண்டிருப்பார் பாரதியார்; அது போல் குலோத்துங்கனும் 'புன்மை புன்மை இப்புன்மையை வையகம் எங்ஙனம் பொறுக்கின்றதோ?' எனப் 'புன்மை' என்ற சொல்லை மூன்று முறை கையாண்டு ஈழத் தமிழரின் சொல்லொணாத் துயரினைப் புலப்படுத்தியுள்ளார்.

*ஈழம் பற்றி எரிகிறது – தமிழ்*
*இனமே அங்கு அழிகிறது;*
*ஆழம் மிகுந்த கடல்நீர் – ஈழவர்*
*அழுகையின் வெம்மையில் கொதிக்கிறது*[43]

என முழுத்தீவே பற்றி எரியும் கொடுமையைப் பிறிதொரு கவிதையில் உருக்கமாகப் பதிவு செய்துள்ளார் கவிஞர்.

ஈழத்தின் அவலக்காட்சியை ஊடகங்களில் காணும்போது கவிஞருக்கு, 'உயிர் பற்றி எரிவதே போல் மனமெல்லாம் வேகிறது.' 'வையம் காணா ஈனத்தின் ஈனத்தின் ஈனம்' என அதனைச் சுட்டும் கவிஞர்,

*தீயணைக்கும் படைபோல விரைந்து சென்று*
*சிறுமையிதைத் தடுக்காமல் வையம் முற்றும்*

*வாயடைத்து நிற்கிறதே! மனித மேநின்*
*மனச்சாட்சி என்பதெலாம்* மாயை தானோ![44]

என வேதனையோடு வினவுகின்றார்.

> 'ஈமப் பூமி', 'மனிதம் எரிகிறது', 'நாணம் கடந்த நாகரிகம்', 'தீயே எரிவது தெரிகிறது', 'இலங்கைத் தமிழனின் இதய ஒலி', 'இப்படியும் ஒரு கொடுமை', 'கடலில் ஒரு கல்லறை' என்னும் தலைப்புகளில் ஈழத் தமிழரின் சொல்லொணாச் சோகத்தினைச் சித்திரிக்கும் வகையில் கவிஞர் படைத்திருக்கும் கவிதைகள், பேராசிரியர் கார்த்திகேசு சிவத்தம்பி குறிப்பிடுவதுபோல், 'தமிழ் ஆத்மாவின் ஓலமாக, மானுடத்தின் கையறு நிலைக் கதறல்களாக வெளிவந்துள்ளன'[45]

**புதுயுகத்துக் கவிஞர்**

தமக்கு முன்னைய தமிழ்க் கவிஞர்களிடம் இருந்து மரபினை (Tradition) உள்வாங்கிக் கொண்டு கவிதை படைக்கும் குலோத்துங்கன், தமது தனித்திறன் (Individual Talent) வெளிப்படும் வகையில் கவிதை படைப்பதிலும் கண்ணும் கருத்துமாக இருக்கின்றார். ஓர் எடுத்துக்காட்டு: பொற்காலத்தைப் பின்னோக்கி ஏங்காமல், முன்னோக்கி முயற்சி செய்யும் கவிதைகளைக் குலோத்துங்கன் படைத்துத் தந்துள்ளார். இது அவரது கவிதைகளின் தனித்தன்மை ஆகும். தமிழின் பழம்பெருமையைப் போற்றுவதுடன் நின்றுவிடாமல், அணுயுகத்தைச் செந்தமிழில் பார்க்க வேண்டும் என்ற விருப்பத்தையும் அவர் தம் கவிதைகளில் அழுத்தமாக வெளிப்படுத்தியுள்ளார்.

*முந்தைப் பற்றொடு, புதுமை சேர்க்கும்*
*பண்பிலார் வளர்வதில்லை*[46]

*வருநாட் தேவையை உணர்ந்த மனத்தவர்*
*வாழுவர்; வளருவர்*[47]

என எதிர்மறை வாய்பாட்டாலும், உடன்பாட்டு நோக்கிலும் அவர் தம் கருத்தினைக் கவிதைகளில் ஆங்காங்கே பதிவு செய்துள்ளார்.

குலோத்துங்கனிடம் காணப்படும் பிறிதொரு தனித்திறன் அறிவியலையும் ஆன்மிகத்தையும் இலக்கியத்தையும் சரிவிகிதத்தில் இணைத்துக் கவிதை படைத்தல் ஆகும். அறிவியல் பார்வை – ஆன்மிக இதயம் – இலக்கியச் சுவை

என்னும் மூன்றினது கூட்டுக் களியே குலோத்துங்கம் எனலாம். தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் மறைவினை ஒட்டி எழுதிய இரங்கல் கவிதையில் 'இமயமென நின்ற தமிழ் ஞானி' என்றும், 'அறிவியலும் ஆன்மிகமும் இணைந்து நிற்கும் அற்புதத்தின் தந்தை' என்றும், 'புதுயுகத் துறவி'[48] என்றும் குலோத்துங்கன் அடிகளாரைக் குறிப்பிடுவது நோக்கத்தக்கது. இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதை உலகில் அறிவியலையும் ஆன்மிகத்தையும் இலக்கியத்தையும் ஒன்றிணைத்துப் பாடிய 'புதுயுகக் கவிஞராக'க் குலோத்துங்கன் என்றென்றும் மதிக்கப் பெறுவார்; போற்றப்படுவார்.

## குறிப்புகள்

1. அணிந்துரை, குலோத்துங்கனின் வளர்தமிழ், ப.5.
2. 'குலோத்துங்கன் கவிதைகளும் குழந்தைசாமியும் – ஒரு முன்னுரைக் குறிப்பு', குலோத்துங்கன் கவிதைகள், ப.45.
3. குலோத்துங்கன் கவிதைகள், ப.235.
4. மேலது, ப.136.
5. மேலது, ப.499.
7. மேலது, ப.67.
8. மேலது, ப.67.
9. மேலது, ப.125.
10. மேலது, ப.653.
11. மேலது, ப.654.
12. மேலது, ப.307.
13. மேலது, ப.48.
14. மேலது, ப. 542.
15. மேலது, பக்.137–138.
16. அணிந்துரை, பேராசிரியர் தமிழண்ணல், குலோத்துங்கன் கவிதைகள், ப.694.
17. குலோத்துங்கன் கவிதைகள், ப.143.
18. மேலது, ப.184.
19. மேலது, ப.188.
20. மேலது, ப.213.

21. மேலது, ப.248.
22. மேலது, ப.275.
23. மேலது, ப.279.
24. மேலது, ப.413.
25. மேலது, ப.442.
26. மேலது, ப.504.
27. மேலது, ப.567.
28. மேலது, ப.612.
29. மேலது, ப.635.
30. மேலது, ப.639.
31. மேலது, பக். 587–588.
32. கடலும் படகும், ப.30.
33. குலோத்துங்கன் கவிதைகள், ப.295.
34. மேலது, ப.516
35. மேலது, ப.659.
36. மேலது, ப.141.
37. மேலது, ப.66.
38. மேலது, ப.184.
39. மேலது, ப.346
40. மேலது, ப.426.
41. மேலது, ப.608.
42. மேலது, ப.625.
43. மேலது, ப.622.
44. மேலது, ப.621
45. 'குலோத்துங்கன் கவிதைகளும் குழந்தைசாமியும் – ஒரு முன்னுரைக் குறிப்பு', குலோத்துங்கன் கவிதைகள், ப.43.
46. குலோத்துங்கன் கவிதைகள், ப.355.
47. மேலது, ப.231.
48. மேலது, ப.612.

# 3. வா.செ.கு. என்ற ஆளுமையாளர்

கவிஞரை நேரிற் கண்டு பழகி அறியுமுன்னரே, அவரது ஆழ்ந்த கவியுள்ளத்தை – உயர்வுள்ளும் உள்ளத்தை – இனங்கண்டு கொண்டமை என் அளவில் எனக்கு மனநிறைவு அளிப்பதாயுள்ளது.

–க.கைலாசபதி[1]

## ஆளுமை என்றால் என்ன?

மேலோட்டமான நிலையில் 'ஆளுமை' என்ற சொல் நடைஉடை பாவனை முதலானவற்றைக் குறிக்கும்; ஆயின், ஆழ்ந்து நோக்கினால், ஒருவரது ஆளுமை என்பது அவரது மனத்தூய்மையையும் மனத் திட்பத்தையும் செயல் திறனையும் காட்டுவதாகும். ஆளுமை என்பதற்குக் கையடக்க ஆக்ஸ்ஃபோர்டு மேற்கோள் அகராதி (Compact Oxford Reference Dictionary) கீழ்க்காணும் மூன்று பொருள்களைத் தருகின்றது:

1. ஒரு மனிதனின் குணத்தினை உருவாக்கும் இயல்புகள் (Qualities that form a person's character)
2. ஒருவரைப் புகழுக்கு உரியவராக்கும் அல்லது மக்கள் செல்வாக்குப் பெற்றவராக உயர்த்தும் இயல்புகள் (Qualities that make interesting or popular)
3. மக்களால் மதிக்கப் பெறும் பெருந்தகையோர் (a celebrity)

## I. வா.செ.கு.வின் ஆளுமை வளர்ச்சி

'ஆளுமை வளர்ச்சி' என்ற கருத்தாக்கம் (Concept) வா.செ.கு.வின் படைப்புக்களில் பயின்று வருவதைக் காண முடிகின்றது. அவர் தம் 'அறிவியல் உலகம்' என்னும் கவிதையில், 'ஆளுமை தருவது கல்வியடா'[2] எனத் தம் கல்விச் சிந்தனையைத் தெளிவுபடுத்தியுள்ளார்; 'மானுட யாத்திரை' காப்பியத்தில் ஓர் இடத்தில் 'ஆளுமைத் திறனர்'[3] என்ற சொல்லாட்சியைக் கையாண்டுள்ளார்; 'தியாக தீபம்' என்னும் கவிதையில் 'மனங்கலங்கா ஆளுமை'[4] படைத்தவர் எனத் தம் தங்கை முத்துலட்சுமியைக் குறிப்பிட்டுள்ளார். 'ஆளுமையின் உருவமென அமைந்த தோற்றம்'[5] என்பது கவியரசர் பாரதியாரைப் பற்றிய அவரது படப்பிடிப்பு.

'ஆளுமையின் வீறுடனும் ஆண்ட முழுத் துறவி'[6] என அவர் தம் கவிதை ஒன்றில் காமராசரைச் சுட்டுவதும் இங்கே நினைவுகூரத் தக்கதாகும். இங்ஙனம் ஆளுமை வளர்ச்சி பற்றிய அடிப்படையான சிந்தனைகளை வா.செ.கு. தம் கவிதைகளில் ஆங்காங்கே புலப்படுத்தியுள்ளார். இனி, வா.செ.கு.வின் ஆளுமை உருவாக்கத்தில் சிறப்பிடம் பெறுவோரைக் குறித்துக் காணலாம்.

**1. பெற்றோர் மீது பெருமதிப்பு – தங்கை மீது பேரன்பு**

வா.செ.கு. தாம் இந்த உலகிற்கு வருவதற்குக் காரணமான பெற்றோர் மீது மலையினும் மாணப் பெரிய மரியாதையும், உடன்பிறந்த தங்கை முத்துலட்சுமி மீது மிகுந்த பாசமும் கொண்டவராக விளங்குகின்றார். பொதுவாக, ஆளுமையாளர்களின் தனி வாழ்க்கையைக் கூர்ந்து பார்த்தால், அவர்கள் 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்னும் ஆன்றோர் வாக்கைத் தாரக மந்திரமாகக் கொண்டவர்களாக இருப்பார்கள். 'என் பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றதன்றோ?' என்றாற் போல் தம் உடன்பிறந்தோர் மீது பேரன்பு செலுத்துகின்றவர்களாக விளங்குவார்கள். இப் பொதுவிதி வா.செ.கு. என்ற ஆளுமையாளர்க்கும் நன்கு பொருந்தி வருகின்றது.

வா.செ.கு. 'இரவு பகலாகத் தன்னை அழித்து எனக்குத் தடம் சமைத்த தந்தை' எனத் தமது தந்தை வே.செல்லப்பக் கவுண்டர் பற்றியும், 'அன்னை எனும் பெயரின் அழியாத காவியம்' என்று தாய் மாரம்மாள் பற்றியும் உருக்கமாகக் குறிப்பிட்டுள்ளார்; ஈன்று புறந்தந்த தாய், சான்றோன் ஆக்கி அவையத்து முந்தி இருக்கச் செய்த தந்தை இருவரது 'பொன்னை நிகர்த்த பதம் போற்றிப் படைப்பதாக'த் தம் நூல்களில் நெகிழ்வோடு சுட்டியுள்ளார்.

*பசியெனத் தாகமெனப் பாராள்; ஆறப்*
*பச்சைமர நிழல் தேடாள், துன்பம் கண்டு*
*மசிதலிலாள்; மனம் தளராள், எனது கல்வி*
*வாழ்வொன்றே தவமாக வாழ்ந்தி ருந்தாள்*[7]

எனத் தம் அன்னையைப் பற்றிய பசுமையான நினைவுகளைக் 'காலன் செய்த சதி' என்னும் கவிதையில் பதிவு செய்துள்ளார் குலோத்துங்கன். 'ஈடு காணேன்' என்ற தலைப்பில் எழுதிய பிறிதொரு கவிதையிலும்,

*நீண்டது பாதை; முட்கள்*
*நிறைந்தன; தடைகள் யாவும்*
*தாண்டிய நெஞ்சம் காணத்*
*தந்தைதாய் இலையென் றேங்கும்*[8]

எனத் தம் பெற்றோர்களை நெகிழ்வுடன் நினைவுகூர்ந்துள்ளார் கவிஞர். 'இருவரை இழந்த வாழ்வு, எத்தனை இழந்த தம்மா!' என்னும் குறுகத் தறித்த இரு வரிகள் போதும், குலோத்துங்கன் தம் பெற்றோர் மீது கொண்டிருக்கும் பெருமதிப்பையும் பேரன்பையும் எடுத்துக்காட்ட! இதே போல் உடன்பிறந்த தங்கை முத்துலட்சுமி மீது வா.செ.கு. மிகுந்த பாசம் வைத்துள்ளார்; 'எந்தன் உயர்வொன்றேதான் எல்லாம் என நினைந்த தெய்வமென வாழ்ந்தவள்' என்றும், 'இரும்பெடுத்துக் காய்ச்சி அதை எஃகாக்கி மேலும் உரம் பெறும் படிக்கு மாற்றியதோர் பீடுடைய நெஞ்சினள்' என்றும் அவருக்குப் புகழாரம் சூட்டியுள்ளார்.

*மாலைகளும் பாராட்டும்*
*வாய்ப்புகளும் வந்தடையும்*
*காலை உனையன்றி ஒரு*
*கடவுளையும் நான் நினையேன்*[9]

என்னும் வைர வரிகளால் தம் தங்கையைப் பற்றிய பசுமையான நினைவுகளைப் பதிவு செய்துள்ளார் வா.செ.கு. ஆங்கிலக் கவிஞர் வேர்ட்ஸ்வொர்த் தம் சகோதரி டோரதி (Dorothy) மீது கொண்டிருந்தது போன்ற ஓர் உள்ளார்ந்த அன்பினை வா.செ.கு. தம் தங்கையிடம் வைத்திருந்தது குறிப்பிடத்தக்கது.

## 2. ஆசிரியர்கள்பால் ஆழ்ந்த ஈடுபாடு

எந்தச் சாதனையாளரின் (Achiever) வாழ்விலும் ஆசிரியர்கள் ஓர் இன்றியமையாத இடத்தைப் பெற்றவர்களாக இருப்பார்கள்; குறிப்பாக, தொடக்கப் பள்ளி, உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்கள் சாதனையாளர்களின் ஆளுமை உருவாக்கத்திற்குச் சிறப்பான பங்களிப்பினை நல்கி இருப்பார்கள். இவ்வகையில் வா.செ.கு. தம் பள்ளிப்பருவத்தில் தக்க ஆலோசனைகள் கூறி வழிகாட்டியவர்களாக எஸ்.நடராஜ பிள்ளை, கே.எஸ்.ரங்கசாமி அய்யங்கார், வேலாயுதக் கவுண்டர் முதலான ஆசிரியப் பெருமக்களை ஆழ்ந்த நன்றியுணர்வோடு நினைவுகூர்ந்துள்ளார்.

> எனது பள்ளிப் பருவத்தில், திண்ணைப் பள்ளிக்கூட நிலையிலிருந்து பல முடிவுகள் தற்செயலாக உருவானவை என்றே கூறலாம். வாழ்க்கைப் பந்தயத்தில் மிக வேகமாக ஓட வேண்டும் என்ற ஆசை மட்டும் எனக்கு மிகுதியாக இருந்தது. ஆனால் அதற்கேற்ற அளவில், திசை பற்றிய தெளிவோ, அதைத் தெளிவுபடுத்த உதவும் குடும்பப் பின்னணியோ இருக்கவில்லை. பள்ளிக் கல்வி முடியும் வரை ஒவ்வொரு கட்டத்திலும் அதை நிர்ணயித்தவர்கள், எனது ஆசிரியர்கள்தான். ஆசிரியர்களின் நல்லெண்ணத்தாலும், ஆலோசனையாலும் பெரும்பயன் அடைந்தவன் என்று நான் என்னைக் கூறிக் கொள்ளலாம்[10]

எனத் தம் ஆசிரியர்களுக்கு உரிய வகையில் புகழாரம் சூட்டியுள்ளார் வா.செ.கு.

### 3. ஆளுமையைச் செதுக்கிய பெருமக்கள் நால்வர்

வா.செ.கு. வின் வாழ்வையும் படைப்புக்களையும் நுணுகி நோக்கும்போது, அவரது ஆளுமையைச் செதுக்கிய பெருமக்களாக நால்வரை அடையாளம் காணமுடிகின்றது. 'பகுத்தறிவுப் பகலவன்' தந்தை பெரியாரும் அறிஞர் அண்ணாவும் மகாகவி பாரதியாரும் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனும் இளமைக் காலத்தில் இருந்தே வா.செ.கு. வின் ஆளுமை வளர்ச்சிக்கு வலுவான அடித்தளம் இட்டுள்ளனர்.

> *பகுத்தறிவே, விழிப்புணர்வே சமுதா யத்தின்*
> *நந்தாத தீப்பந்தம்; வய்ய வாழ்வின்*
> *நங்கூரம்*[11]

என்னும் வரிகளே போதும், வா.செ.கு. தந்தை பெரியாரின் வழிவந்தவர் என்பதை நிலைநாட்ட.

> *'மனிதன்நீ; வையத்தின் மன்னன்; தாழ்வு*
> *மனப்பான்மை யில்லாது மண்ணில் நிற்கும்*
> *துணிவு பெறு; பகுத்தறிவின் துணைகொள்' என்று*
> *சொன்னவன்*[12]

எனப் 'பீடுடைய பெம்மான் இவனன்றே' எனத் தமிழ் கூறு நல்லுலகிற்குத் தந்தை பெரியாரின் ஆளுமைப் பண்புகளை

அடையாளம் காட்டியுள்ளார் குலோத்துங்கன். 'மண்ணோடும் வளியோடும் வானோடும் வாழ்வாய்'[13] என்னும் தலைப்பில் 'பகுத்தறிவின் சுட'ரான பெரியாரின் மறைவு குறித்துக் கவிஞர் பாடிய கையறுநிலைக் கவிதையும் இங்கே நினைவுகூரத்தக்க தாகும்.

தமிழகம் கண்ட அரசியல் தலைவர்களில் தமக்கு அடுத்த தலைமுறை உருவாக வேண்டும் என்று தாயுள்ளத்தோடும் பரந்த மனப்பான்மையோடும் செயல்பட்டவர் அறிஞர் அண்ணா. 'என்னினும் மிஞ்சினோர் வளர்க' என்னும் வா.செ.கு.வின் கவிதை அறிஞர் அண்ணாவிடமிருந்து பெற்ற ஆளுமைப் பண்பை அடையாளம் காட்டும் அருமையான கவிதை ஆகும்.

*நம்மின் மேலவர் தாம்உரு வாவதைத்*
*தாம்வ ளர்வதின் மேலெனத் தாங்குவோர்*
*தலைவர்; அன்னவர் தம்புகழ் பாடுவேன்*[14]

எனத் தலைவருக்கு வா.செ.கு. வகுக்கும் வரைவிலக்கணம், அறிஞர் அண்ணாவுக்கு நூற்றுக்கு நூறு பொருந்தி வருவதாகும். இக் கவிதை வா.செ.கு.வின் ஆளுமைத் திறனையும் புலப்படுத்துவதாகும். 'இயற்கை நீ கொடியன்', 'செந்தமிழங் கில்லையெனில் திரும்புவாயோ?'[15] என அறிஞர் அண்ணாவின் மறைவின்போது இரு கையறுநிலைக் கவிதைகள் பாடி, அண்ணாவின் மீது தாம் வைத்திருக்கும் பற்றையும் பாசத்தையும் புலப்படுத்தியுள்ளார் குலோத்துங்கன்.

மகாகவி பாரதியாரின் எழுத்துக்களில் வா.செ.கு.வுக்கு மிகுந்த மதிப்பும் மரியாதையும் உண்டு. அவரது நோக்கில் பாரதி, 'கவிதைத் தாயின் தலைமகன்'; 'புதுயுகத்துக் கவியரசு'; 'அறிவியலின் பேராற்றல் அறிந்த மேதை'[16]. 'பாரதியின் அறிவியல் பார்வை' பற்றித் தனிநூல் ஒன்றே எழுதியுள்ளார் வா.செ.கு.

*சொல்லக் கொதிக்கு தடா நெஞ்சம் – வெறுஞ்*
*சோற்றுக்கோ வந்ததிந்தப் பஞ்சம்?*[17]

என்னும் பாரதியாரின் நெஞ்சக் கொதிப்பே,

அட
சோற்றுக்கு மானிடர்
வாடுவதா – மனம்

சொல்லக் கொதிப்பதை
யாருணர்வார்?[18]

எனக் குலோத்துங்கனின் கைவண்ணத்தில் மறுபிறவி எடுத்துள்ளது.

*மலையாது முன்னேறிச்*
*செல்வோம் – மனித*
*வாழ்வுமுடி வில்லாத*
*முன்னேற்றப் பயணம்*[19]

என்றாற்போல் வா.செ.கு. தம் கவிதைகளில் தன்மைப் பன்மை நடையில் வாசகரை உளப்படுத்திப் பாடும் இடங்களில் எல்லாம் பாரதியின் தாக்கத்தை உய்த்துணரலாம்.

'புதுவைத் தமிழ்க் குயில்' பாரதிதாசனும் வா.செ.கு.வின் படைப்பாளுமையில் ஆழ்ந்த தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளார். 'அடா!' என மனித குலத்தை – மனிதனை – உணர்ச்சியோடும் உரிமையோடும் விளித்துக் கருத்துக்களை வேகமான நடையில் நறுக்கென்றும் சுருக்கென்றும் எழுதிச் செல்லும் இடங்களில் எல்லாம் வா.செ.கு. பாரதிதாசனை நினைவுபடுத்துகின்றார். ஓர் எடுத்துக்காட்டு:

*நசையோடு நோக்கடா எங்கும் உள்ளாள்*
*நல்லழகு வசப்பட்டால் துன்பம் இல்லை*[20]

என்னும் பாரதிதாசனின் வாக்கினை உள்வாங்கியே,

*. . . . அறிவின்*
*விழிகொண்டு நோக்கடா*
*நிலமெங்கும் இன்பம்*[21]

எனப் படைத்துத் தந்துள்ளார் குலோத்துங்கன்.

*எத்தனை நாள்இது நடக்கும் – புவி*
*எதுவரை இதனைச் சகிக்கும்?*[22]

என்னும் கவிஞரின் கூற்றிலும் பாரதிதாசன் தாக்கம் இடம்பெற்றிருப்பது நெற்றித் திலகம்.

இங்ஙனம் பெரியாரும், அண்ணாவும், பாரதியும், பாரதிதாசனும் வா.செ.கு.வின் ஆளுமையைச் செதுக்கியவர்களாக – தனிவாழ்விலும் படைப்பு வாழ்விலும் ஆழ்ந்த தாக்கத்தை ஏற்படுத்தியவர்களாக – விளங்குகின்றனர்.

## II. இளைய தலைமுறையினரின் ஆளுமை வளர்ச்சிக்கு வா.செ.கு. வலியுறுத்தும் ஆறு கட்டளைகள்

*1. 'வாழ்வில் எதிர்நீச்சல் முன்னேற்றப் பயணம்' எனத் தெளிக![23]*

*2. 'இயலும் என்பவர்க்கு எதுவும் அரிதல!' என உணர்க![24]*

*3. 'விதிக்கு ஒரு விதிசெய் திண்மை' பெறுக![25]*

*4. 'பெருமிதம் கலந்த பண்பின் பீடுடை வாழ்வு' வாழ்க![26]*

*5. திடம், குவிந்த சிந்தை, செயலின் திறம் என்னும் மூன்றும் கைவரப் பெற்றுத் தெய்வ நிலையை அடைக![27]*

*6. மண்ணில் விண் சமைப்போராக உயர்க![28]*

இனி, ஒவ்வொரு கட்டளை குறித்தும் நிரலே காணலாம்.

### 1. 'வாழ்வில் எதிர்நீச்சல் முன்னேற்றப் பயணம்'

*. . . என்*
*பயணம் பெரிது: செலும்*
*பாதை நெடிது[29]*

என்பது வா.செ.கு.வின் ஒப்புதல் வாக்குமூலம். அவரது கருத்தில், 'மனித வாழ்வு முடிவில்லாத முன்னேற்றப் பயணம்'[30]; 'வாழ்வில் எதிர்நீச்சல் முன்னேற்றப் பயணம்'[31]. வாழ்வில் முன்னேறத் துடிக்கும் இளைய தலைமுறையினர் அனைவரும் தம் பாதை எது எனத் தேர்ந்து, அதில் பயணம் மேற்கொள்ள வேண்டும், வாழ்வில் எதிர்நீச்சல் இட்டு முன்னேற வேண்டும் என்ற முனைப்பைத் தம் மனத்தில் வளர்த்துக் கொள்ள வேண்டும்.

*மாறுவதும் எங்களினம்; நிமிடந் தோறும்*
*வளர்வதும் எங்களினம்; படிஒவ் வொன்றாய்*
*ஏறுவதும் எங்களினம்[32]*

என்னும் வா.செ.கு.வின் வரிகள் ஒவ்வோர் இளைஞரின் தாரக மந்திரமாகக் – குறிக்கோள் முழக்கமாக – இருத்தல் வேண்டும். 'பயணமும் தெளிந்து, செல்லும் பாதையும் வகுத்து, நாளும் அயர்விறந்து உழைப்போர் யாவும் அடைகுவர்'[33] என்பது குலோத்துங்கம்.

### 2. 'இயலும் என்பவர்க்கு எதுவும் அரிதல!'

இன்றைய இளைஞர்களுக்கு வா.செ.கு. வலியுறுத்த விரும்பும் செய்தி, 'இயலும் என்பவர்க் கெதுவும் அரிதல, எழுந்து

நிற்பவர்க்(கு) இமயம் தடையல'[34] என்பது ஆகும். வாழ்வில் வெற்றி பெற விழையும் இளையோர்க்கு அவர் காட்டும் வழிமுறை இதுதான்;

*... ... சக்தி*
*முழுமையும் குவிந்த காலை*
*இயல்வது வெற்றி; இங்கு*
*ஏழைஎன் றெவரு மில்லை*[35]

'ஏழை என்று இங்கு எவரும் இல்லை' என்பது வா.செ.கு.வின் அழுத்தம் திருத்தமான கருத்து ஆகும். 'முயலும் மானிடன் முடிவு காணுவன், முன்னர்த் தோற்பினும் பின்னர் வெல்லுவன்'[36] என ஆழமாக நம்புகின்றார் வா.செ.கு. வெற்றி, தோல்விகளைப் பற்றிக் கவலைப்படாமல் தனது சக்தி முழுவதையும் குவித்து, வெற்றிக்குப் பாடுபடுமாறு இளைஞர்களை ஆற்றுப்படுத்துகின்றார் வா.செ.கு.

## 3. விதிக்கு ஒரு விதிசெய் திண்மை

இளைய தலைமுறையினர் விதியை எண்ணி விழுந்து கிடக்காமல், விதிக்கு ஒரு விதி செய்யும் திண்மையைப் பெற வேண்டும் எனக் கருதுகின்றார் வா.செ.கு.

*இமயச் சிகரம் வளரட்டும்; தொடர்ந்து*
*ஏறும் வலிமை எம்கால் பெறட்டும்*[37]

என எண்ணுகின்றவர்களாக இந்தியத் திருநாட்டின் இளைஞர் ஒவ்வொருவரும் உருவாக வேண்டும் என்பது வா.செ.கு.வின் கனவு. அவரே 'தணியாத தாகம்' என்னும் கவிதையின் முடிவில் முத்தாய்ப்பாகக் கூறுவது இதுதான்.

*சோதனைத் தீயினில் வெந்து நிமிர்ந்தவர்*
*தோல்வியை ஏற்பதிலை – அட*
*சாதனைப் பாதையில் முன்னடி வைத்தவர்*
*தாகம் தணிந்ததிலை.*[38]

சாதனைப் பாதையில் முன்னடி வைத்தவர் ஒருபோதும் தன் தாகம் தணிந்ததில்லை; வேகம் குறைந்ததில்லை. அவர்கள் விதிக்கு ஒரு விதி செய்யும் மனத்திண்மை பெற்றவர்களாக விளங்குவார்கள். கம்பராமாயணத்தில் 'விதியின் பிழை இதற்கு நீ என்னை வெகுண்டது?' என்று இராமன் கேட்ட போது, 'விதிக்கு விதியாகும் என் வில்தொழில் காண்டி'[39] என இலக்குவன் சொன்ன மறுமொழி இங்கே நினைவுகூரத் தக்கதாகும்.

### 4. பெருமிதம் கலந்த பண்பின் பீடுடை வாழ்வு

'பெரிதொன்று காண்பம் எனும் பீடுடை நெஞ்சினன் யான், தரை வாழ்வில் நின்றாலும் தவ வாழ்வை மேற்கொண்டேன்'[40] எனத் தம் நிலையைத் தெளிவுபடுத்தும் வா.செ.கு.வுக்கு மிகவும் விருப்பமான சொல் 'பீடு' என்பது. இச்சொல் அவரது கவிதைகளில் பயின்று வருவதைக் காணலாம். "யான் நிலத்திடை தேவன்: எந்தன் நெறியினில் தாழ்வ தில்லேன்"[41] என அறுதியிட்டு உரைக்கும் வா.செ.கு., 'பெருமிதம் ஒளிரும் நெஞ்சம், பீடுசேர் நடையும் கொண்ட, திரு'[42], வினைப் பாடவே பெரிதும் விரும்புகின்றார். 'வாரணம் நடந்த தன்ன, மலையெழுந்து அசைந்த தன்ன, பெருமிதம் கலந்த பண்பின், பீடுடை வாழ்வு'[43] வாழுமாறு அவர் இளைஞர்களுக்கு அறிவுறுத்துகின்றார்.

*பெருமிதம் சேர் பீடுநடைப்*
*பெரியோன், பெருந் தலைவன்*[44]

என்பது பெருந்தலைவர் காமராசருக்கு வா.செ.கு. சூட்டும் புகழாரமாகும்.

### 5. திடம் + குவிந்த சிந்தை + செயலின் திறம் = தெய்வ நிலை

வா.செ.கு.வின் கருத்தியலில், மனிதனே யாவரினும் முதன்மையானவன்; மனிதமே எல்லாவற்றிலும் முக்கியமானது. பட்டம், பதவி, பெயர், புகழ், செல்வம், செல்வாக்கு – இவை எல்லாம் மனித வாழ்வில் நிலையானவை அல்ல; வள்ளுவர் மொழியில் சுட்ட வேண்டும் என்றால் 'ஆகுல நீர பிற!' 'மனிதனின் மேல் ஒரு தேவனை இதுவரை, வையகம் கண்டதிலை'[45], என்றும் 'எப்பொருளும் எவ்வுறவும் மானிடத்தின், ஏற்றம் போல் என்மனதை ஈர்த்த தில்லை!'[46] என்றும் மனிதனையும் மானிடத்தையும் வானளாவப் போற்றுவார் வா.செ.கு. மேலும் அவர், மனிதன் தேவன் ஆவதற்கான – தெய்வ நிலையை அடைவதற்கான – வழிமுறை யினையும் 'சிந்தையும் தோளும்' என்னும் கவிதையில் எடுத்துரைக்கின்றார்:

*திடமுடன், குவிந்த சிந்தையும், செயலின்*
*திறமும் சேர்ந்தால் தெய்வமு மாவோம்*[47]

இவ்வரிகளையே ஓர் அறிவியல் விதியைப் போல இரத்தினச் சுருக்கமாக நாம் இப்படி கூறலாம்:

திடம் +குவிந்த சிந்தை + செயலின் திறம் = தெய்வ நிலை

## 6. விண் சமைப்போர் வருக!

இந்தியத் திருநாட்டின் இளைஞர் யாவரும் ஒருபோதும் 'வேடிக்கை மனித'ராக வாழ்தல் கூடாது. வினையாளராக – புத்துலக வேட்பாளராக – வாழ்க்கை, நடைமுறை, பழமரபு யாவற்றையும் மாற்றுபவராக – மண் மீது விண்ணைச் சமைப்பவராக – வாழ்ந்து காட்ட வேண்டும். இதுவே இளைஞர் உலகிற்கு வா.செ.கு. விடுக்கும் இன்றியமையாத செய்தி ஆகும். 'விண் சமைப்போர் வருக' என்னும் கவிதையில் அவர் இளைய பாரதத்திற்கு முன்வைக்கும் அறைகூவல் இதுதான்:

*வேடிக்கை மனிதரையாம்*
*வேண்டுவதொன் றில்லை. . . நிதம்*
*மேற்செல்லும் பயணம்*
*விழைகின்றார் வருக! இவண்*
*விண் சமைப்போர் வருக!*[48]

'கொடுக்கிற தெய்வம் கூரையைப் பிய்த்துக் கொண்டு கொடுக்கும்' என்னும் பழமொழியை நம்பி, 'விண்ணிலே உள்ளது எனும் மாளிகையை எண்ணி, மேலே பார்த்திருப்போர்' நம் நாட்டிற்கு ஒருபோதும் தேவையில்லை; 'மண்ணிலே தாமாக மாளிகை ஒன்று ஆக்க, மனங்கொண்ட சிற்பிகளே' இன்று தேவை. 'இந்நிலத்தில், இப்பிறப்பில் இயலும்' என்ற உறுதியான நம்பிக்கையோடும், 'நாள்தோறும் முன்செல்வது மனிதம்'[49] என்னும் உயரிய குறிக்கோளுடனும், 'மேலதினும் மேல தேடும் விழைவுடன், மண் மீது விண்ணைக் காண'த் துடித்தெழுந்து செயலாற்றும் ஆளுமைத் திறம் மிக்க இளைஞர்களாலேயே உலக அரங்கில் இந்தியா தலைநிமிர்ந்து நிற்கும் என ஆழமாக நம்புகின்றார் வா.செ.கு. அத்தகைய இளைஞர்களை உருவாக்கும் நோக்குடனேயே இன்றளவும் இடைவிடாமல் எழுதியும் பேசியும் வாழ்ந்து காட்டியும் வருகின்றார் வா.செ.கு.

*உழைப்பறியா வாழ்வுதனில் உயிர்ப்பொன் றில்லை*
*உள்ளத்தில் ஏணியுளர் உயர்வர்*[50]

என்பது குலோத்துங்கம்.

## குறிப்புகள்

1. முன்னுரை, குலோத்துங்கன் கவிதைகள், ப.669.
2. குலோத்துங்கன் கவிதைகள், ப.362.
3. மேலது, ப.74.
4. மேலது, ப.659.
5. மேலது, ப. 598.
6. மேலது, ப.3.
7. மேலது, ப.645.
8. மேலது, ப.647.
9. மேலது, ப.662.
10. டாக்டர் வா.செ.குழந்தைசாமி வாழ்க்கைக் குறிப்பு, ப. 37.
11. குலோத்துங்கன் கவிதைகள், ப.16.
12. மேலது, ப.593.
13. மேலது, பக்.594–595.
14. மேலது, ப.129.
15. மேலது, பக். 589–592.
16. மேலது, பக். 598 – 608.
17. பாரதியார் கவிதைகள், ப.505.
18. குலோத்துங்கன் கவிதைகள், ப.281.
19. மேலது, ப.106.
20. அழகின் சிரிப்பு, ப.5.
21. குலோத்துங்கன் கவிதைகள், ப.105.
22. மேலது, ப.291.
23. மேலது, ப.193.
24. மேலது, ப.136.
25. மேலது, ப.67.
26. மேலது, ப.67.
27. மேலது, ப.205.

28. மேலது, ப.242.
29. மேலது, ப.117.
30. மேலது, ப.106.
31. மேலது, ப.193.
32. மேலது, ப.130.
33. மேலது, ப.200.
34. மேலது, ப.136.
35. மேலது, ப.200.
36. மேலது, ப.136.
37. மேலது, ப.66.
38. மேலது, ப.74.
39. அயோத்தியா காண்டம், நகர் நீங்கு படலம், பா.129–130.
40. குலோத்துங்கன் கவிதைகள், ப.660.
41. மேலது, ப.133.
42. மேலது, ப.273.
43. மேலது, ப.67.
44. மேலது, ப.3.
45. மேலது, ப.576.
46. மேலது, ப.128.
47. மேலது, ப.205.
48. மேலது, பக்.242 – 243.
49. மேலது, ப.266.
50. மேலது, ப.267.

# 4. மனித வள மேம்பாடு

> குல + உத்துங்கன்: தான் பிறந்த குலத்துக்கு வலிமை, உயர்ச்சி, புகழ், தலைமை ஆகியவற்றைச் செய்பவனே குலோத்துங்கன். குலம், உத்துங்கம் இரண்டும் வடமொழிதான்: இரண்டும் இணைவதால் தமிழினம் உயர்வும் புகழும் தலைமையும் பெறுவதைச் சுட்டுவது இந்தப் புனைபெயர். –ம.ரா.போ.குருசாமி[1]

பாரதியார் தேசியக் கவிஞர் என்றால், பாரதிதாசன் புரட்சிக் கவிஞர் என்றால், கவிமணி குழந்தைக் கவிஞர் என்றால், நாமக்கல் கவிஞர் காந்தியக் கவிஞர் என்றால், சுரதா உவமைக் கவிஞர் என்றால், காசி ஆனந்தன் உணர்ச்சிக் கவிஞர் என்றால், குலோத்துங்கன் ஆய்வறிவுக் கவிஞர் ஆவார்.

> இன்றைய சூழ்நிலையில் குலோத்துங்கன் ஓர் ஆய்வறிவுக் கவிஞர் (Intellectual Poet) என விவரித்தல் சரியானதாயிருக்கும்[2]

என்னும் கலாநிதி க.கைலாசபதியின் மதிப்பீடும் இக் கருத்தினை உறுதி செய்யும். வேறு சொற்களில் குறிப்பிடுவது என்றால், குலோத்துங்கன் வெறும் உணர்ச்சியில் விளையாடும் கவிஞர் அல்லர்; கூர்த்த அறிவினில் நடை பயிலும் கவிஞர் ஆவார். "பகுத்துணரும் அறிவே எம் உரைகல்"[3] என்னும் கவிஞரின் கூற்று இவ்வகையில் நோக்கத்தக்கது.

> *விழிப்பொன்று வர வேண்டும்;*
> *மானி டத்தின்*
> *விசை முழுதும் எழ வேண்டும்*[4]

என விழிப்புணர்வையும் மானிடத்தின் எழுச்சியையுமே தம் விழுமிய குறிக்கோள்களாகக் கொண்டு குலோத்துங்கன் நெடுங்காலமாகக் கவிதை படைத்து வருவதும் இங்கே மனங்கொளத்தக்கது.

## தமிழ் இலக்கியத்தில் மனித வள மேம்பாடு

"எவ்வழி நல்லவர் ஆடவர், அவ்வழி நல்லை வாழிய நிலனே" (புறநானூறு, 187) என்னும் சங்க கால ஔவைப் பெருமாட்டியின் கூற்று, மனித வளத்தின் மாண்பினை வலியுறுத்து வதாகும். வள்ளுவரும் "நாடென்ப நாடா வளத்தன" (739) என்றும், "அறிவுடையார் எல்லாம் உடையார்" (430) என்றும், "கேடில்

விழுச்செல்வம் கல்வி" (400) என்றும், "முயற்சி திருவினை ஆக்கும்" (616) என்றும், "உடையார் எனப்படுவது ஊக்கம்" (591) என்றும், "மன நலம் மன்னுயிர்க்கு ஆக்கம்" (457) என்றும் மொழிவன இவ் வகையில் நினைவுகூரத் தக்கன. வள்ளுவரை வழி மொழிவது போல் பாட்டுக்கொரு புலவர் பாரதியாரும் அச்சமும் பேடிமையும் அடிமைச் சிறுமதியும் கொண்டோரை 'ஊமை ஜனங்கள்' என்று சுட்டுவார்; ஊக்கமும் உள்வலியும் உண்மையில் பற்றும் உள்ளவரையே மக்களாக மதிப்பார். இங்ஙனம் முன்னைப் பழைய இலக்கியங்களிலும் பின்னைப் புதிய இலக்கியங்களிலும் மனித வள மேம்பாடு பற்றிய அடிப்படையான சிந்தனைகள் ஆங்காங்கே விரவிக் கிடப்பதைக் கண்டறியலாம். இச் சிந்தனை மரபின் தொடர்ச்சியையும் வளர்ச்சியையும் குலோத்துங்கனின் கவிதைகளில் சிறப்பாகவும் முனைப்பாகவும் காண முடிகின்றது. இதனைத் தொகுத்தும் பகுத்தும் காணும் முயற்சியே இவ்வியல்.

## மதி வளம் நமது செல்வம்

கவிஞர் குலோத்துங்கன் (டாக்டர் வா.செ.குழந்தைசாமி) 'மதி வளம் நமது செல்வம்' என்ற தலைப்பிலேயே ஓர் உரைநடை நூலைப் படைத்துள்ளார். அதில் அவர், நில வளம், நீர் வளம், கனிம வளம் என்னும் இயற்கை வளங்கள் எவையும் இல்லாத சிறிய நாடுகளான இஸ்ரேலும், சிங்கப்பூரும் இன்று உலக அரங்கில் வலிமையும் வளமும் தன்னிறைவும் பெற்ற நாடுகளாக உயர்ந்து விளங்குவதற்கு முழுமுதற் காரணம் மனித வளமே – மனித வளத்தின் மதிவளமே என்பதை அழுத்தமாகக் குறிப்பிட்டுள்ளார். சிந்தனையைத் தூண்டும் அவரது கருத்து வருமாறு:

> நில வளம், நீர் வளம், கனிம வளம் என்பவற்றுள் எதையும் இயற்கை தராத பாலை நிலையிலும், ஒரு சிறிய நாடான இஸ்ரேல் இன்று வலிமையும் வளமும் கொண்டு நிற்பதற்கு அந்நாட்டின் மதிவளம் பெற்ற மனித வளம் தான் காரணம்... 1960–களில், ஏறத்தாழ நம்மையொத்த நிலையில் தான் சிங்கப்பூர் இருந்தது. இன்று அது உலகின் வளம் மிக்க நாடுகளில் உயர்ந்த இடத்தை வகிக்கிறது. இந்த மகத்தான முன்னேற்றத்துக்குப் பாதை அமைத்தது, பயணத்திற்கு வாகனம் படைத்துத் தந்தது கல்வியறிவு; கல்வியறிவின் அடிப்படையில் அமைந்த மனித வளம்; மனித வளத்தின் மதிவளம்.[5]

இக் கருத்தினை,

> *வழிவழி வந்த பண்பின்*
> *மதிவளம் நமது செல்வம்*[6]

எனக் கவிதை வடிவிலும் ஓர் இடத்தில் சுருங்கிய முறையில் வெளியிட்டுள்ளார் குலோத்துங்கன்.

**மானிடர்தம் மனவலி ஓர் விந்தை**

கவிஞர் குலோத்துங்கன் தமது இளவல் கடும்பிணியில் கரைந்து வருவது கண்ட இதயக் குமுறலின் எதிரொலியாகப் படைத்துள்ள கவிதை 'சக்திச் சுரங்கம்' என்பது. "நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்" என ஏழாம் நூற்றாண்டில் முழங்கினார் அப்பர் சுவாமிகள். "காலா என்னருகே வாடா – சற்றே உனைக் காலால் மிதிக்கிறேன்" எனக் காலனுக்கு எதிராக இருபதாம் நூற்றாண்டில் உறுதியாகக் குரல் கொடுத்தார் பாரதியார். இருவரையும் அடியொற்றி, "காலனையும் வரவேற்று உபசரித்து வழியனுப்பி வைப்போம் எனும் உரமே நம் மானிடத்துக்கு உற்ற துணை"[7] என அழுத்தம் திருத்தமாக மொழிகின்றார் குலோத்துங்கன். அவரது அகராதியில் 'விதி' என்று சொல்வதெலாம் வலிமையிலார் வார்த்தை. அவர் போற்றுவது வெற்றியையன்றி வேறெதையும் ஏற்காத திண்ணிய நெஞ்சையே ஆகும்; மானிடர்தம் உள்ளத்தின் ஆழத்தில் ஊற்றெடுக்கும் பெரும் சக்தியையே ஆகும்.

> *மண்மீது மானிடர்தம்*
> *மனவலி ஓர் விந்தையடா!*[8]

என்னும் அக் கவிதையின் முடிப்பு வரிகள் முத்தாய்ப்பானவை. எண் சாண் உடல் கடந்தும் இயங்கும் திறன் வலிமையான எண்ணங்களுக்கு உண்டு என ஆழமாக நம்புகின்றார் கவிஞர்.

கவிஞர் குலோத்துங்கனைப் பொறுத்த வரையில் வாழ்க்கை முன்னேற்றத்திற்கு அடிப்படை மனித வளம்; மனித வளத்தின் மையம் மதி வளம்; மதி வளத்தின் வலிமை எண்ணங்கள். 'சிந்தையும் தோளும்' என்னும் பிறிதொரு கவிதையிலும், 'உளவலி யல்லது ஒருவலி யில்லை'[9] என முடிந்த முடிபாகக் கூறுவார் குலோத்துங்கன். மேலும், அவர் அக் கவிதையின் இறுதியில், திடம், குவிந்த சிந்தை, செயலின் திறம் ஆகிய மூன்றையும் உளவலியின் முப்பெரும் அடிப்படைகளாகக் குறிப்பிடுவார். மகாகவி பாரதியார் 'நல்லதோர் வீணை செய்தே' என்னும் தம் மந்திரப் பாடலில் 'உள்ளம் வேண்டியபடி செல்லும் உடல்' எனச் சுட்டுவதும் இங்கே ஒப்புநோக்கத்தக்கதாகும்.

## குலோத்துங்கனின் பாவிகம்

'அரைசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாகும்; உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்துவர்; ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும்' என்னும் முப்பெரும் உண்மைகளைச் சிலப்பதிகாரக் காப்பியத்தின் பாவிகம் என்பர் அறிஞர். அதுபோல, குலோத்துங்கனின் பாவிகமாக நாம் மூன்று உண்மைகளைக் குறிப்பிடலாம். அவை வருமாறு:

1. மனிதனின் மேல் ஒரு தேவன் இல்லை.
2. மண்ணே நம் சுவர்க்கம்.
3. முயற்சி யுண்டெனின் முழுமை காணுவம்.

*மனிதனின் மேல் ஒரு தேவனை இதுவரை*
*வையகம் கண்டதிலை – அட*
*மனிதனின் கீழெனும் புழுவோ பூச்சியோ*
*மண்ணிற் பிறந்ததிலை!* [10]

என்பது கவிஞர் குலோத்துங்கனின் அழுத்தமான கருத்து. 'நாட்டுதும் யாம்ஓர் பாட்டுடைச் செய்யுள்' என்பது போல்,

*மனிதச் சாதியின் வாழ்வின் மிஞ்சிய*
*புனிதம்ஒன் றிலை, இதைப் புவிமிசை நாட்டுவம்*[11]

என உறுதி மிக்க குரலில் உரைப்பார் குலோத்துங்கன்.

அடுத்து, கவிஞர் குலோத்துங்கனின் கருத்தியலில் மண்ணே நம் சுவர்க்கம். சுவர்க்கம் என்பது மேலே விண்ணில் இருப்பதன்று; அதை மண்ணிலேயே காணலாம். மனிதன் முயன்றால் மண்ணிலேயே விண்ணைக் காணலாம். இவ் வகையில் பாரதியே குலோத்துங்கனுக்கு முன்னோடி; வழிகாட்டி.

*அண்ணாந்து விண்ணுலகைப் பார்த்துப் பார்த்து,*
*அங்குசெலும் வழிதேடி யலைந்தோர் தம்முன்*
*மண்ணேநம் சுவர்க்கமெனும் மாற்றம் சொன்னான்;*
*மானிடர்கள் அமரர்களாய் வளர்க வென்றான்*[12]

எனப் 'பாரதி கண்ட பாரதம்' என்னும் கவிதையில் பாரதிக்குப் புகழாரம் சூட்டுவார் கவிஞர்.

'இவண் விண் சமைப்போர் வருக!' என்பது வினையாளர்க்கு – புத்துலக வேட்பாளர்க்கு – கவிஞர் குலோத்துங்கன் விடுக்கும் அறைகூவல்; வேண்டுகோள். இன்னும் ஒரு படி மேலே சென்று,

*விண்ணிலே உள்ளதெனும்*
*மாளிகையை எண்ணி,*

*மேலேபார்த் திருப்பவரை*
*வேண்டுவதொன் றில்லை;*
*மண்ணிலே தாமாக*
*மாளிகையொன் றாக்க,*
*மனங்கொண்ட சிற்பிகளை*
*வரவேற்க வந்தோம்*[13]

என அவர்களுக்கு வரவேற்பு மடலே வாசிப்பார் கவிஞர்.

மூன்றாவதாக, ‘முயற்சி யுண்டெனின் முழுமை காணுவம்’[14] என முழங்கும் குலோத்துங்கம். ‘மானிட இதயம் மிஞ்சி ஓர் இறைவன் இல்லை’ என்பது கவிஞர் வாக்கு. ‘இதயமே இறைவன்’ என இரத்தினச் சுருக்கமாகவும் மொழிவார் அவர்.

*இயலும் என்பவர்க் கெதுவும் அரிதல*
*எழுந்து நிற்பவர்க்(கு) இதயம் தடையல*
*முயலும் மானிடன் முடிவு காணுவன்*
*முன்னர் தோற்பினும் பின்னர் வெல்லுவன்*[15]

என மனித முயற்சிக்கு மணிமகுடம் சூட்டுவார் குலோத்துங்கன்.

பேராசிரியர் தமிழண்ணல் குறிப்பிடுவது போல்,

> ‘எட்டாத பொருளுக்குக் கொட்டாவி விடாதே’ என்பது பழைய பழமொழி. ‘எட்டாததற்கும் ஏணி படைத்து, ஏறவும் பழகு’ என்பது குலோத்துங்கம்.[16]

‘மானுடம் பாடுவேன் யான்’ – ‘மதியினைப் போற்றுவேன் யான்’ – ‘திண்மையைப் பாடுவேன் யான்’ – ‘வாழ்வின் புனிதத்தைப் போற்றுவேன் யான்’[17] என்றெல்லாம் ஒப்புதல் வாக்குமூலம் வழங்கும் கவிஞர் குலோத்துங்கன், மனிதனுக்கு வகுக்கும் வரைவிலக்கணம் பொருள் பொதிந்தது; மனித வள மேம்பாட்டின் ஊற்றுக்கண்ணாய் விளங்குவது. அதனைக் கவிஞரின் மொழியிலேயே இங்கே காண்பது பொருத்தமாக இருக்கும்.

*தினமொரு புதுமை தேடும்*
*சிந்தையன்: தேடு கின்ற*

*மனமொரு விந்தை: மண்ணில்*
*மனிதனோர் விந்தை: நாளும்*

*மதிவளம் கொண்டு மேலும்*
*வளர்பவன்: தடைகள் கோடி*

*எதிர்கொளும் இயல்பு கொண்டோன்*[18]

வாழ்வில் எதிர்கொள்ளும் தடைக்கற்களைப் படிக்கற்கள் ஆக்கி, தடந்தோளின் உதவிகொண்டு நாள்தோறும் முன்னேறிச்

செல்பவனே மனிதன்; 'மாந்தர் நடைப் பயணம் சிகரத்தை நாடிச் செல்லும் வேள்வி; மேலதினும் மேலே தேடும் விழைவுடையார் மண்மீது விண்ணும் காண்பர்'[19] என்பது கவிஞரின் ஆழ்ந்த நம்பிக்கை.

*பயணமும் தெளிந்து, செல்லும்*
*பாதையும் வகுத்து, நாளும்*
*அயர்விறந் துழைப்போர் யாவும்*
*அடைகுவர்; நிமிர்ந்து நின்று*
*முயல்வது மனிதம்; சக்தி*
*முழுமையும் குவிந்த காலை*
*இயல்வது வெற்றி; இங்கு*
*ஏழைஎன் றெவரு மில்லை.*[20]

தெளிந்த பயணம் – திட்டமிட்டு வகுத்த பாதை – இடைவிடாத முயற்சி – முழுமையாய்க் குவிந்த சக்தி; இவை நான்குமே வெற்றிக் கூட்டணி ஆகும். இவை வெறும் வார்த்தைகளாக இல்லாமல், வாழ்க்கையின் தாரக மந்திரம் ஆனால், 'இங்கு ஏழை என்று எவரும் இல்லை' என அறுதியிட்டு உரைக்கின்றார் குலோத்துங்கன். 'உழைப்பறியா வாழ்வுதனில் உயிர்ப்பொன்றில்லை, உள்ளத்தில் ஏணியுளர் உயர்வர்'[21] என்பது அவரது கொள்கை முழக்கம்; உயிர்க் கொள்கையும் கூட.

**கல்வி – வளர்ச்சி வாயில்**

மனித வாழ்க்கை நீண்ட முன்னேற்றப் பயணம்; அந்த மகத்தான பயணத்திற்கு வாகனமாகக் – கருவியாக – அமைவது கல்வியறிவு. கல்வி என்பதற்குக் கவிஞர் குலோத்துங்கன் தரும் விளக்கம் புதுவது; மனித வள மேம்பாட்டின் அடிப்படையில் அமைவது. அவ் விளக்கம் வருமாறு:

*ஏடன்று கல்வி; சிலர் எழுதும் பேசும்*
*இயலன்று கல்வி: பலர்க் கெட்டா தென்னும்*
*வீடன்று கல்வி; ஒரு தேர்வு தந்த*
*விளைவன்று கல்வி: அது வளர்ச்சி வாயில்*[22]

இன்னும் ஒரு படி மேலே சென்று,

*கடவுளர் தவறி னாலும்*
*கைவிடாச் செல்வம் கல்வி*[23]

என 'மானுட யாத்திரை' காப்பியத்திலும் கல்விச் செல்வத்தின் தனித்தன்மையைப் பறைசாற்றுவார் கவிஞர்.

கல்வி என்பது கவிஞரின் நோக்கில் வகுப்பறை அன்று; பாடத் திட்டம் அன்று; தேர்வு முறையும் அன்று; பட்டத்தைப்

பெற்றுத் தரும் வழிமுறையும் அன்று. பின் எது தான் கல்வி? அது ஓர் உயிருள்ள பொருள்; வளர்ச்சி வாயில். அதனால் தான் வள்ளுவர், 'ஒருமைக்கண் தான்கற்ற கல்வி, எழுமைக்கும் ஏமாப்பு உடைத்து' (398) எனக் கல்வியின் அருமையினையும் பெருமையினையும் ஒருங்கே உணர்த்தினார். 'ஆறிலும் சாவு; நூறிலும் சாவு' என்பது பழமொழி. 'ஆறிலும் கல்வி; நூறிலும் கல்வி'[23] என்பது கவிஞர் குலோத்துங்கன் படைக்கும் புதுமொழி.

*. . . . . . . . . . இந்நாள்*
*இதுவரை கண்டி ராத*
*ஏற்றமும் எழிலும் தாங்கிப்*
*புதுஅவ தாரம் பெற்றாய்;*
*புவியினில் முதன்மை பெற்றாய்*[25]

எனப் 'புது அவதாரம்' என்னும் கவிதையில் இன்று கல்வி கண்டிருக்கும் புதிய பரிணாம வளர்ச்சியைப் – புவியில் பெற்றிருக்கும் முதன்மை இடத்தைச் – சுட்டிக் காட்டுகின்றார் கவிஞர். 'கல்வி யுகம் மலர்கிறது' என்னும் தலைப்பில் பாடிய பிறிதொரு கவிதையின் முடிவிலும்,

*. . . . . . வளம் எதுவும்*
*வருங்கா லத்தில்*
*கல்லாத சமுதாயம்*
*காண்ப தில்லை;*
*கல்வியுகம் மலர்கிறது;*
*காண வாரீர்!*[26]

எனக் கல்வி யுக மலர்ச்சிக்குக் கட்டியம் கூறி வரவேற்பார் கவிஞர்.

*. . . . . . . . . . . மானிடர்*
*மதிவள மொன்றே வையக வாழ்வின்*
*நிதியென நிறையென நிறுவிய 'கல்விப்*
*புதுயுகம்' வானில் புலர்வது காணீர்*[27]

என 'விதியே விதியே, தமிழச் சாதியை' என்னும் தலைப்பில் பாடிய நெடுங்கவிதையிலும் இக் கருத்தினைத் தமிழ் கூறு நல்லுலகிற்கு எடுத்துரைப்பார் குலோத்துங்கன்.

*அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்*
*என்னுடைய ரேனும் இலர்'* *(430)*

என்னும் வள்ளுவரின் கூற்று, "ஒரு தொலைநோக்குள்ள மேதையின் வாக்கு. மானிட இனம் என்னும் வளம் நிறைந்த சுரங்கத்திற்குள் அடங்கி நிற்கும் அளவிடற்கரிய ஆற்றலின்

சாத்தியக் கூறுகளை ஊடுருவி உணர்ந்திருந்த, காலம் கடந்து காணும் கருத்துக் கதிர் பெற்றிருந்த ஒரு ஞானியின் கணிப்பு"[28] எனக் குறிப்பிடுவார் டாக்டர் வா.செ.குழந்தைசாமி. இத்துடன் நில்லாமல், இக் குறளுக்குப் பரிமேலழகர் வரைந்துள்ள நுட்பமான உரை விளக்கத்தினையும் எடுத்துக்காட்டிப் போற்றுவார் அவர்.

> செல்வம் எல்லாம் அறிவால் படைக்கவும் காக்கவும் படுதலின், அஃது உடையாரை, 'எல்லாம் உடையார்' என்றும், அவை எல்லாம் முன்னே அமைந்து கிடப்பினும் அழியாமல் காத்தற்கும் தெய்வத்தால் அழிந்துழிப் படைத்தற்கும் கருவியுடையவர் அன்மையின் அஃது இலாதாரை 'என்னுடைய ரேனும் இலர்' என்றும் கூறினார்

என்னும் பரிமேலழகரின் விளக்கம் ஊன்றி உணரத் தக்கதாகும்.

அறிவை ஆற்றல் வாய்ந்த ஒரு கருவியாகக் கண்ட வள்ளுவரின் சிந்தனை – அதற்குப் பரிமேலழகர் தந்த விளக்கம் – இன்றைய கணினி யுகத்திற்கும் ஏற்புடையதாகும்.

நிறைவாகக் குறிப்பிடுவது என்றால், மனித இனத்தின் நீண்ட வாழ்க்கை முன்னேற்றப் பயணத்திற்கு வாகனமாகக் கல்வியறிவு – அக் கல்வியறிவின் அடிப்படையில் அமைந்த மனித வளம் – மனித வளத்தின் உயிர்ப்பாக மதி வளம் – இதுவே கவிஞர் குலோத்துங்கனின் கவிதைகளில் காணலாகும் மனித வள மேம்பாட்டுச் சிந்தனைகளின் சத்து; சாரம்; பிழிவு.

## குறிப்புகள்

1. குலோத்துங்கன் கவிதைகள் – ஒரு திறனாய்வுப் பார்வை, ப.2.
2. குலோத்துங்கன் கவிதைகள், ப.667.
3. மேலது, ப.105.
4. மேலது, ப.208.
5. மதி வளம் நமது செல்வம், ப.vi.
6. குலோத்துங்கன் கவிதைகள், ப.178.
7. மேலது, ப.649.
8. மேலது, ப.649.
9. மேலது, ப.205.

10. மேலது, ப.576.
11. மேலது, ப.574.
12. மேலது, ப.610.
13. மேலது, ப.242.
14. மேலது, ப.235.
15. மேலது, ப.136.
16. அணிந்துரை, குலோத்துங்கன் கவிதைகள், ப.693.
17. குலோத்துங்கன் கவிதைகள், பக்.272-273.
18. மேலது, ப.269.
19. மேலது, ப.266.
20. மேலது, ப.200.
21. மேலது, ப.267.
22. மேலது, ப.202.
23. பாகம் 3: 630.
24. மதிவளம் நமது செல்வம், ப. 48.
25. குலோத்துங்கன் கவிதைகள், ப.220.
26. மேலது, ப.194.
27. மேலது, ப.394.
28. மதி வளம் நமது செல்வம், முன்னுரை, p.v.

# 5. தமிழ் தமிழர் தமிழ்நாடு

*செந்தமிழ்த்தாய் நின்வளங்கள் சிறந்த வேனும்*
*தேவை இனும் கோடியுள; அவற்றுள் ஏதும்*
*எந்தமிழால் தீராதோ, என்னும் நெஞ்ச*
*ஏக்கத்தால் எழுதுகிறேன்* —குலோத்துங்கன்[1]

*. . . . . . அறிவியற் கலைகளில்*
*வல்லமை யெய்தவும், வளர்தமிழ் வழியதைச்*
*சொல்லவும் விழைந்த தொண்டன்*[2]

என்பது கவிஞர் தம்மைப் பற்றிக் கூறிக் கொள்ளும் அறிமுகக் குறிப்பு. 'தமிழ் வளர்ச்சி' (மேம்பாடு + பயன்பாடு = வளர்ச்சி) என்னும் தலைப்பிலேயே டாக்டர் வா.செ.குழந்தைசாமி ஒரு விரிவான உரைநடை நூலை எழுதியுள்ளார்; 'ஒரு தமிழ் வளர்ச்சிப் பனுவல்' என்று அதற்குச் சிறப்புக் குறிப்பும் தந்துள்ளார். பேராசிரியர் அ.ச.ஞானசம்பந்தனின் சொற்களில் குறிப்பிடுவது என்றால்,

> குலோத்துங்கன் என்ற தமிழ்க் கவிஞரைக் குழந்தைசாமி என்ற உலகஞ் சுற்றும் பொறியியல் விஞ்ஞானி ஊட்டந்தந்து வளர்க்கிறார். அதன் பயனாகக் கவிஞரின் பார்வை அகலப் பார்வையாக (Broad Vision), மன வீச்சு (Mental Sweep) உலகந் தழுவியதாக வளர்கிறது[3].

குலோத்துங்கன் கவிதைகளில் தமிழ் தமிழர் தமிழ்நாடு பற்றி இடம்பெற்றிருக்கும் பதிவுகளைத் தொகுத்தும் பகுத்தும் காண்பது இவ்வியலின் நோக்கம் ஆகும்.

**எண்ணின் இனிப்பது தமிழ்!**

கவியரசர் பாரதியார், பாவேந்தர் பாரதிதாசன் ஆகியோரின் அடிச்சுவட்டில் கவிஞர் குலோத்துங்கன் தமிழை 'அணையா ஒளி' என்றும், 'இன்பத்தின் ஊற்று' என்றும், 'வாழ்வுக் கடலில் தோணி' என்றும், 'துன்பம் துடைக்கும் மருந்து' என்றும் பலவாறு போற்றிப் பாடுகின்றார்; "செம்மொழியின் குழுவிற்குத் தலைமை தாங்கும் திறமுடையள்"[4] எனத் தமிழன்னைக்குப் புகழாரம் சூட்டுகின்றார்.

'கன்னலின் சாறும் முப் பழமும் – கோதையர் கனிவாய் இதழும் பிறவும் உண்ணின் இனிப்பன; மிகுமேல் இவை ஊறு செய்வது இயற்கை'. இவற்றினின்றும் வேறுபட்ட இனிமைச் சுவை படைத்தது தமிழ்.

*எண்ணின் இனிப்பது தமிழாம் – எங்கள்*
*இன்பத் தமிழ்மொழி வாழ்க![5]*

என நெஞ்சாரத் தமிழை வாழ்த்தி மகிழும் கவிஞர்,

*ஒருபொருள் காலத்தை வென்றே – தழைத்*
*தோங்கி வளர்ந்துள தென்றால்*
*அருமைத் தமிழ்மொழி அன்னாய் – நீ*
*அன்றோ அணையா ஒளியே![6]*

என அன்னைத் தமிழ் மொழியின் அருமையை விதந்து போற்றுகின்றார்.

தமிழை எண்ணுந்தோறும் கவிஞரின் நெஞ்சில் ஆனந்தக் களிப்பே மேலிடுகின்றது; 'தமிழ் என்மொழி என்மொழி இன்பத்தின் ஊற்றடா!' என உணர்ச்சி பொங்கப் பாடுகின்றார்.

*வாழ்வு கசப்பதுண்டோ? – தமிழ்*
*மாது தருஞ்சுவை உண்டு களித்தபின்[7]*

என இயல்பான மொழியில் வினவுகின்றார் கவிஞர். மேலும் அவர், 'திருவள்ளுவன் ஔவை இளங்கோவைப் பெற்றதால், மண் ஒளி பெற்றது' எனக் கருதுகின்றார்.

பதினேழாம் நூற்றாண்டைச் சார்ந்த அருட்கவிஞர் குமரகுருபரர், பத்தொன்பதாம் நூற்றாண்டைச் சார்ந்த வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள், இருபதாம் நூற்றாண்டைச் சார்ந்த கவியரசர் பாரதியார், பாவேந்தர் பாரதிதாசன் ஆகியோரைப் பின்பற்றிக் குலோத்துங்கனும் தமிழ் மொழிக்கு அழகிய அடைமொழிகளைச் சூட்டி மகிழ்கின்றார். 'அருந்தமிழ்', 'அருமைத் தமிழ்', 'அழகுத் தமிழ்', 'அன்னை அமுதத் தமிழ்', 'அன்னைத் தமிழ்', 'இன்தமிழ்', 'இன்பத் தமிழ்', 'இனிய தமிழ்', 'எந்தமிழ்', 'என்னரும் தமிழ்', 'சங்கம் கண்ட எங்கள் தமிழ்', 'செந்தமிழ்', 'செழுந் தமிழ்', 'கன்னித் தமிழ்', 'திருத்தமிழ்', 'தெள்ளுதமிழ்', 'நந்தமிழ்', 'நற்றமிழ்', 'பைந்தமிழ்', 'முத்தமிழ்' என்றாற் போல் தமிழுக்குக் கவிஞர் சூட்டியுள்ள சிறப்பு அடைமொழிகள் பற்பலவாகும். அவை தமிழ் மொழியின் பன்முகத் திறன்களையும் பரிமாணங்களையும் பறைசாற்றுவனவாக விளங்குவது குறிப்பிடத்தக்கதாகும்.

**இனிய தமிழ் 'புதுப்பிறவி' எடுக்க வேண்டும்!**

'வளர்க தமிழ்' என்னும் தலைப்பில் குலோத்துங்கன் படைத்துள்ள கவிதை சிறப்பானது; தமிழராய்ப் பிறப்பெடுத்த ஒவ்வொருவரும் ஆழ்ந்து சிந்திக்க வேண்டுவது; தொலை நோக்குடன் தமிழினம் செயலாற்ற வழிவகை கூறுவது. 'வளர்க தமிழ்!', 'வாழ்க தமிழ்!' எனக் கூடி நின்று வாழ்த்துவதால் மட்டும் தமிழ் வளர்ந்து விடாது; 'கூடி வழுத்துவதால் தமிழ் வளர வசிட்டரா நீர்?' என்பது கவிஞர் இக் கவிதையின் தொடக்கத்தில் கையாண்டிருக்கும் கூரிய கேள்விக் கணை. தமிழுக்கு அளவற்ற பழம்பெருமை உண்டு; உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை. ஆனால், உலகம் அறியும் வகையில் அதனை எடுத்துரைக்க நாம் அறிந்தோ மில்லை; முயன்றோமில்லை. அதே போலத் தமிழில் அரிதினும் அரிய கலைப் புதையல் உள்ளது என்பதும் எவரும் மறுக்க முடியாத உண்மை; எனினும், அண்டை மாநிலத்தவரும் அயல்நாட்டினரும் உணர்ந்து கொள்ளும் வண்ணம் அதனை நாம் திறம்பட உரைத்த தில்லை. கிணற்றுத் தவளையைப் போல் நமக்குள் நாமே காலங் காலமாகக் குலப் பெருமை பேசி வருகிறோம். 'இது கொடுமை யன்றோ?' எனக் காரசாரமாக வினவுகின்றார் குலோத்துங்கன்.

*தாழ்ந்தஇனம் உயர்ந்த மொழி சமைத்ததில்லை,*
*தானாக எம்மொழியும் வளர்ந்த தில்லை*[8]

என்பது கவிஞரின் முடிந்த முடிபு; உயிர்க் கொள்கை.

'செந்தமிழின் பெருமை' எனச் செவிகள் கைப்பத் தினந்தோறும் பேசித் திரிவோரைப் பார்த்து 'நந்தமிழின் பெருமை எது?' என நேரடியாக, அடுக்கடுக்கான வினாக்களின் வடிவில் கேட்கின்றார் குலோத்துங்கன்.

*நந்தமிழின் பெருமை எது? ஆங்கி லம்போல்*
*ஞாலத்தின் பொதுமொழியா? உலக மன்றில்*
*அமர்வுடைய ஆட்சிமொழிக் குழுவில் ஒன்றா?*
*ஐக்கியநாட் டவைமொழியா? மனித சாதி*
*நமதென்னும் செம்மொழியில் வரிசை பெற்ற*
*யவனம்போல், வடமொழிபோல் நமது ஒன்றா?*
*வையத்தின் துறையனைத்தும் தன்னுள் கொண்டு*
*வளர்மொழியா: பல்கலையின் வாயிலா?*[9]

'ஆய்வில்லாது கதை சொல்லி என்ன பயன்?', 'தமிழர் வாழ்ந்த கதை பேசி இன்று வரை கண்டதென்ன?', 'இனி உலகம் ஏற்க, நாம் செய்வதென்ன?', 'இந்நாளின் தேவைகளை எண்ணாமல் காலமெலாம் பின்னோக்கிப் பின்னோக்கிப் பின்னோக்கிப் பேசி என்ன பயன்?'— கூரிய இவ் வினாக்களுக்கு எல்லாம் குலோத்துங்கன் தரும் விடை,

*. . . . .சங்கம் கண்ட*
*எங்கள் தமிழ் புதுமைகளோ(டு) இணைய வேண்டும்*[10]

என்பதே ஆகும். கவிஞரின் நோக்கில் தமிழர்கள் யாவரும் கருத்தில் கொள்ள வேண்டிய அனுபவ மொழி: 'கூடி நின்று வழுத்துவதால் தமிழ் வளர்வதில்லை; எதிர்காலத்தை ஊடுருவி அறியாதார், உயர்வதில்லை'[11].

உலக அரங்கில் தமிழினம் வளர்ச்சி குன்றிச் சுடர் மங்கி நிற்பதற்கான காரணங்களைக் குறித்து ஆழ்ந்து சிந்தித்த கவிஞர்,

*திருக்குறளும் சிலம்பொலியும் கம்பன் செய்த*
*சித்திரமும் தேவையெல்லாம் தீர்ப்ப துண்டோ?...*
*. . . . . அணுயு கத்தைச்*
*செந்தமிழிற் பார்த்தீரோ? மொழிவ ளர்க்க*
*மருத்துவரின் பொறிவலரின் அறிவி யல்நூல்*
*வல்லுநரின் துணைதேட வழிசெய் தீரோ?*[12]

என அடுக்கடுக்காகத் தமிழ்கூறு நல்லுலகை நோக்கிக் கேள்விக் கணைகளைத் தொடுக்கின்றார். 'இந்தக் காசினியில் இன்று வரை அறிவின் மன்னர் கண்டுள்ள கலைகளெல்லாம், தமிழில் எண்ணிப் பேசி மகிழும் நிலை வர வேண்டும்' என்பது கவிஞரின் நீண்ட கால வேட்கை; உயரிய கனவு.

*. . . . வளமும் கலையும்*
*பொங்க மீண்டும் தமிழர் பண்டைப்*
*புகழின் மிஞ்சி முதன்மை யாங்கும்*
*தங்க வாழ்வர் என்ற செய்தி*
*தாணி பேசும் நாளும் வருமோ?*
*. . . . . எங்கள்*
*அன்னை அமுதத் தமிழின் செல்வம்*
*அவனி விழையும் நாளும் வருமோ?*[13]

எனத் தம் ஏக்க உணர்வினை 'நாளும் வருமோ?' என்னும் கவிதையில் பதிவு செய்துள்ளார் கவிஞர்.

சங்கம் கண்ட நம் முன்னைப் பழந்தமிழ் பின்னைப் புதுமைகளோடு இணைய வேண்டும் என விழைகின்றார் குலோத்துங்கன். 'முந்தைப் பற்றொடு, புதுமை சேர்க்கும் பண்பிலார் வளர்வதில்லை'[14] என்பது அவரது அழுத்தம் திருத்தமான கருத்து. அவரது மொழியிலேயே குறிப்பிட வேண்டும் என்றால்,

*இனியதமிழ் 'புதுப்பிறவி' எடுக்க வேண்டும்*
*எதிர்காலத் தேவையெலாம் ஏற்க வேண்டும்.*[15]

அப்போதுதான் செந்தமிழ், பாவேந்தர் பாரதிதாசன் போற்றிய 'செழுந்தமி'ழாகப் புதிய அவதாரம் எடுக்கும்; உலக அரங்கில் 'தகத்தகாயத் தமி'ழாக ஒளிவீசி நிற்கும்.

**நவக்கிரக இனத்தவர்!**

*தமிழன் என்றோர் இனமுண்டு;*
*தனியே அவர்க்கொரு குணமுண்டு*

எனப் பாடிய நாமக்கல் கவிஞர், தமிழனின் தனிக் குணம் யாது என்பதைச் சுட்டவில்லை. ஒட்டுமொத்தத் தமிழினமும் ஒன்றுகூடிச் சிந்திக்க வேண்டிய இடம் இது! கவிஞர் குலோத்துங்கன் 'நவக்கிரக இனத்தவர்' என்னும் பொருள் பொதிந்த தொடரால் தமிழினத்தைச் சுட்டுகின்றார்; வரிக்கு வரி – சொல்லுக்குச் சொல் – அங்கதச் சுவை ததும்பி நிற்கும் அக் கவிதையில், தமிழர்கள் யாவரும் ஒத்த நோக்குடன் திரண்டு – ஒரு மனத்துடன் ஒன்றி நின்று – சேர்ந்து செயலாற்றியதாக ஒரு நிகழ்ச்சியேனும் வரலாற்றில் பதிவு பெற்றிருக்கிறதா எனக் கேட்கின்றார்:

*நவம்௭ னப்படும் கிரகம் யாவையும்*
*நண்பர் ஆகலாம்; ஒன்று சேரலாம்;*
*தவமிருப் பினும் தமிழர் ஒன்றி ஓர்*
*தலைமை ஒப்பிய சரிதை ஏதடா?*[16]

கவிஞர் குலோத்துங்கனின் கருத்தில் தமிழனின் தனிக் குணம் இதுதான்: வளர்வாரைத் தடுப்பது – வளர்ந்த பின் துதிப்பது! இதனைத் தமிழரின் விளையாட்டான சடுகுடுவைக் கொண்டே நயம்பட எடுத்துரைக்கின்றார் கவிஞர்.

*சடுகுடு போன்றதோ தமிழர் வளர்ச்சி?*
*– தனியே ஒருநபர் முயல்கின்றவர்;*
*– தடுக்கவும், மடக்கவும் பலர் நின்றனர்;*
*சடுகுடு போன்றதோ தமிழர் வளர்ச்சி?*[17]

தாய்த் தமிழ் நாடு கவிஞரின் பார்வையில் ஒரு விந்தையான தண்ணீர்க் குளமாய்க் காட்சியளிக்கின்றது. தக்கைகள் ஆங்காங்கு மிதக்கின்றன – தக்கவர், பொருண்மையர் அமிழ்கின்றனர்.

வளர்தமிழ் நிலம் கவிஞரின் கண்ணோட்டத்தில் ஒரு விசித்திரமான வழுக்கு மரமாய்த் தோன்றுகின்றது. இங்கே வழுக்கலை நீர் பெய்து வளர்க்கின்றனர் – வளர்வாரை மேலே ஏற விடாமல் தடுக்கின்றனர்.

தமிழர் வளர்ச்சி பற்றிய தம் கருத்தினை ‘வளர்வாரைத் தடுப்பதோ?’ என்னும் கவிதையில் அழுத்தமாகவும் ஆழமாகவும் பதிவு செய்துள்ளார் குலோத்துங்கன்.

*. . . தமிழர் தங்கள்*
*வாழ்வினைப் பற்றி எந்தன்*
*மனத்தினை அழுத்து கின்ற*
*கேள்விகள் கோடி: யாரைக்*
*கேட்பது: பதில்யார் சொல்வார்?*[18]

எனக் ‘கேள்விகள் கோடி’ என்னும் தலைப்பில் எழுதிய கவிதை யிலும் கவிஞர் தனிப்பட்ட முறையில் தம் உள்ளத்து உணர்வினை வெளிப்படுத்தியுள்ளார்.

> எதையோ இழந்துவிட்டு, இழந்தது என்ன என்றும் தெரியாமல், எங்கே தேடுவது என்பதும் அறியாமல், யாரைக் கேட்பது என்பது புரியாமல் கண்ணைப் பிசைந்து கொண்டு தேம்பித் தேம்பி அழும் அனாதைக் குழந்தை போல ஆங்காங்கு அல்லல்படுகிறது தமிழினம்[19]

என்னும் பொருந்திய – பொருள் பொதிந்த – உவமையின் வாயிலாகத் தமிழினத்தின் அவல நிலையினைப் புலப்படுத்தி யுள்ளார் கவிஞர்.

'விதியே விதியே, தமிழச் சாதியை!' என்பது கவியரசர் பாரதியாரின் 'மின்னனு மிஞ்சிய வேகமும் வலிமையும் மிக்க' சொற்களையே தலைப்பாகக் கொண்டு குலோத்துங்கன் புனைந்துள்ள நெடுங்கவிதை. இதிலும்,

*ஒற்றுமை யறியாது) உளுத்த இனமடா!*
*வெற்றுரை, வெற்றுரை, வெற்றுரை வீரர்*[20]

என வெகுளியின் விளிம்புக்கே சென்று சாடுகின்றார் கவிஞர். நெஞ்சில் உரமும் நேர்மைத் திறமும் இல்லாத மனிதரை 'வாய்ச்சொல் வீரர்' என்னும் தொடரால் குறிப்பார் கவியரசர் பாரதியார்; குலோத்துங்கனோ ஒற்றுமை இல்லாத தமிழரை 'வெற்றுரை, வெற்றுரை, வெற்றுரை வீரர்' என மும்முறை அடுக்கிக் கூறிக் கடுமையாகச் சாடுகின்றார்.

**தமிழச் சாதி – ஒரு குவலயக் குடும்பம்**

இருபதாம் நூற்றாண்டில் வெண்டல் வில்கி என்ற அமெரிக்க அரசியல் அறிஞர் எழுதி வெளியிட்ட ஒப்பற்ற நூல் 'ஒரே உலகம்' (One World) என்பது. அந்நூலில் அவர், "வருங்காலத்தில் நம் சிந்தனை உலகாங்குப் பரந்திருத்தல் வேண்டும்" (In future our thinking must be worldwide) என வெளியிட்டிருந்த பொன் மொழி, அறிஞர் உலகைப் பெரிதும் ஈர்த்தது. பேராசிரியர் தனிநாயக அடிகளார் பெருமிதத்துடன் குறிப்பிடுவதுபோல்,

*இருபது நூற்றாண்டுகட்கு முன்னமே தமிழறிஞர்*
*இதனை இனிதுணர்ந்திருந்தார்கள்; உணர்ந்ததனை*
*உயர்ந்த சொல் வடிவில் உரைத்துமுள்ளார்கள்*[21]

*யாதும் ஊரே; யாவரும் கேளிர்* (புறநானூறு 192)

*பெரிதே உலகம்; பேணுநர் பலரே* (புறநானூறு 207)

*எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே* (புறநானூறு 206)

*யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்*
*சாந்துணையும் கல்லாத வாறு.* (திருக்குறள், 397)

என்னும் சான்றோர் வாக்குகள், தமிழ் மக்களின் பரந்து விரிந்த மனப்பான்மையை – உயர்பண்பினை – அடையாளம் காட்டுவனவாகும்.

இன்று தமிழர்கள் இந்தியத் துணைக் கண்டத்தின் எல்லைகள் கடந்து, பூமிப் பந்திடை அமைந்த நாடுகள் பலவினும்

பரவி வாழ்ந்து வருகின்றனர். கவிஞர் குலோத்துங்கன் 'தமிழச் சாதி – ஓர் குவலயக் குடும்பம்' என்னும் கவிதையில்,

*செந்தமிழ் மக்கள் சர்வ*
*தேசியத் தத்து வத்தின்*
*தந்தையர்: வய்ய மெல்லாம்*
*தமர்எனப் பறைய றைந்தோர்*[22]

எனத் தமிழ் மக்களுக்குப் புகழாரம் சூட்டுகின்றார். 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னும் சங்கச் சான்றோர் கணியன் பூங்குன்றனாரின் வைர வரியே இங்கே குலோத்துங்கனின் கை வண்ணத்தில் புதுமைக் கோலம் கொண்டுள்ளது.

நாடு, மொழி, இனம், சமயம், நிறம் என்னும் எல்லைகளை எல்லாம் தாண்டி, உலக ஒருமைப்பாடு, மானுடம் ஆகியவற்றின் அடிப்படையில் வாழ்வியல் வகுத்த மேதை வள்ளுவர் வழியில் வந்தோர் தாழ்வறியாத பண்டைத் தமிழர்தம் மரபின் மக்கள் என்பது குலோத்துங்கனின் அழுத்தம் திருத்தமான கருத்து.

*புவனமும் மானு டர்க்குப்*
*பொது வெனும் தமிழச் சாதி*
*குவ்லயக் குடும்பம்; எங்கும்*
*குறுக்கிடும் சுவர்க எில்லார்*[23]

என்னும் கவிஞரின் வாக்கு, 'தமிழச் சாதி – ஓர் குவலயக் குடும்பம்' என்னும் பேருண்மையைப் புலப்படுத்துவதாகும்.

**தமிழர்க்குக் கவிஞர் கூறும் வரைவிலக்கணம்**

'தமிழர் யார்?' என்று வரையறை செய்வதிலும் குலோத்துங்கனுக்குத் தனிப்பட்ட ஒரு கருத்தியல் உள்ளது. அவரது அகராதியில் "கன்னித் தமிழ் எம(து) அன்னை யென்பவர் அனைவரும் தமிழரே"[24]. பிறிதொரு கவிதையிலும்,

*செந்தமிழை*
*எம்மொழியென் றேற்பவர்கள்,*
*இதயத்தில், எந்தமிழைத்*
*தம்மொழியென் றெண்ணுபவர்*
*தமிழரே*[25]

என அறுதியிட்டு உரைக்கின்றார் கவிஞர். அவரது கண்ணோட்டத்தில் 'செந்தமிழை எம்மொழி' என்றே ஏற்பவர்கள்

– ‘இதயத்தில் எந்தமிழைத் தம் மொழி என்று எண்ணுபவர்கள்’ யாவரும் தமிழரே ஆவர். மேலும் அவர், இத்தகைய பரந்து விரிந்த ஒரு பார்வையுடன் சிந்திக்காமல், ‘யார் தமிழர்?’ என்பதைப் பற்றியே வாதமிட்டுக் கொண்டிருத்தல் ‘வீணர் செயல்’ என்றும் கடுமையாகச் சாடுகின்றார்.

## தமிழினத்திற்குக் கவிஞர் குலோத்துங்கனின் செய்தி

தமிழினத்திற்குக் கவிஞர் குலோத்துங்கன் தம் கவிதைப் படைப்புக்கள் வாயிலாக விடுக்கும் செய்தி (Message) இதுவே:

> முனைப்போடும், திண்மையோடும், தணிவதிலா
> முன்னேற்றத் தாபமொடும், யாவரையும் அணி
> வகுத்து மேல்நடத்தும் ஆற்றல் சான்ற தலைமை
> யொடும், அறிவியலர் மேதை படைத்து அனுப்பும்
> ஓர் ஏவுகணைக் குறியுடனும், சக்தி தரும்
> கொள்கையொடும் என்னினமே எழுவையேல்
> எய்துவதற்கு இயலாதது ஏதுமில்லை; எழுவமேல்
> எய்துவதற்கு இயலாதது ஏதுமில்லை.[26]

கவிஞர் காட்டும் திசையில் ஒவ்வோர் அடியையும் எடுத்து வைத்துப் பயணத்தைத் தொடராமல் – ஒவ்வொரு நொடியையும் பயன்படுத்தி முன்னேறாமல் – கவியரசர் பாரதியார் கூறுவது போல் ‘நாமமது தமிழரெனக் கொண்டிங்கு வாழ்ந்திடுதலில்’ ஒரு பயனும் இல்லை; பொருளும் இல்லை. எனவே, இனி ஒரு விதி செய்வோம்: கவிஞர் காட்டிய வழியைப் பொன்னே போல் போற்றிப் பின்பற்றி, ‘மண்ணிடை நிற்பினும் வாமனன் போன்று விண்ணிடை வளர்ந்து, விரிந்த பார்வையால் உலகனைத்தும் நம் வழியில் ஈர்த்து உயர்வோம்; தமிழினம் உயரப் பாடுபடுவோம்’[27].

### குறிப்புகள்

1. குலோத்துங்கன் கவிதைகள், ப.69.
2. மேலது, ப.65.
3. மேலது, ப.683.
4. மேலது, ப.364.
5. மேலது, ப.337.
6. மேலது, ப.338.

7. மேலது, ப.339.
8. மேலது, ப.346.
9. மேலது, ப.363.
10. மேலது, ப.404.
11. மேலது, ப.413.
12. மேலது, பக்.346–347.
13. மேலது, ப.343.
14. மேலது, ப.355.
15. மேலது, ப.405.
16. மேலது, ப.398.
17. மேலது, ப.555.
18. மேலது, ப.251.
19. 'என்னுரை', விண் சமைப்போர் வருக, ப.19.
20. குலோத்துங்கன் கவிதைகள், ப.390.
21. தமிழ்த் தூது, ப.30.
22. குலோத்துங்கன் கவிதைகள், ப.414.
23. மேலது, ப.415,
24. மேலது, ப.395.
25. மேலது, ப.379.
26. மேலது, பக்.379–380.
27. மேலது, ப.396.

## 6. சாதிச் சாடல்

*சாதி ஒழித்திடல் ஒன்று – நல்ல*
*தமிழ் வளர்த்தல் மற் றொன்று*
*பாதியை நாடு மறந்தால் – மற்றப்*
*பாதி துலங்குவ தில்லை*[1] – பாரதிதாசன்

சாதிக் கொடுமைக்கு எதிரான சாடல்கள் தமிழ் இலக்கிய உலகில் காலங்காலமாக இருந்து வந்துள்ளன.

'இட்டார் பெரியோர், இடாதார் இழிகுலத்தோர் எனச் சாதி இரண்டொழிய வேறில்லை'[2] என ஈத்துவக்கும் பண்பின் அடிப்படையில் புதியதொரு சாதிப் பிரிவினையை உருவாக்கினார் ஔவையார்.

'சாதிப் பிரிவினிலே தீயை மூட்டுவோம்'[3] என்பது பாம்பாட்டிச் சித்தர் முழக்கம். 'சாதி ஆவது ஏதடா?'[4] எனக் கண்டனக் குரல் எழுப்பினார் சிவவாக்கியர். 'சாதி பேதம் என்பதொன்று சற்றுமில்லை இல்லையே'[5] என்பது அவரது முடிந்த முடிபு.

'சாதிகள் இல்லையடி பாப்பா – குலத் தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்'[6] எனச் சாதிக் கொடுமையைப் பாவப் பட்டியலில் சேர்த்தார் பாரதியார்.

'சாதி இருக்கின்றது என்பானும் இருக்கின்றானே' எனத் தம் வேதனையைப் பதிவு செய்தார் பாரதிதாசன்.

'சாதி நோயை அறவே நீக்கவல்ல மருந்து தேவை என்று நினைந்தேன்; நினைந்தேன்; பன்னெடு நாள் நினைந்தேன். ஒன்று கண்டேன். எது? கலப்பு மணம்'[7] என்பது திரு.வி.க.வின் தெளிந்த சிந்தனை; சாதி நோயைத் தீர்ப்பதற்கான சரியான மருந்து.

இங்ஙனம் சாதிக் கொடுமைக்கு எதிராக வாழையடி வாழையாக அழுத்தமாகவும் ஆழமாகவும் குரல் கொடுத்து வரும் தமிழ்க் கவிஞர்களின் வரிசையில் குலோத்துங்கனும் முதன்மையான ஓர் இடத்தினைப் பெறுகின்றார். அவரது கவிதைகளிலும் உரைநடை நூல்களிலும் இடம்பெற்றிருக்கும் சாதிச் சாடல்கள் ஆழ்ந்த சிந்தனையின் அடிப்படையில் எழுந்தவை. அவற்றைத் தொகுத்தும் பகுத்தும் காண்பது பயன் தரும் முயற்சி ஆகும்.

**கரடி கதை உணர்த்தும் உண்மை**

இரண்டு இளைஞர்கள் பெருக்கெடுத்தோடும் ஆற்றின் கரையில் நின்றிருந்தனர். அப்பொழுது வெள்ளத்தில் ஒரு மரக்கிளையும், அதில் கருப்பாக ஒரு பொருளும் மிதந்து செல்வதைப் பார்த்தனர். இருவருள் ஒருவன், 'அந்தக் கருப்பாகத் தெரிவது கம்பளிதான்; நான் எடுத்து வருகிறேன்' என்று ஆற்றில் குதித்து, நீந்திச் சென்று அந்தக் கரும்பொருளைப் பிடித்தான். பிடித்தவன் கரையேறாமல் அந்தக் கரும்பொருளோடு வெள்ளத்தில் செல்வதைக் கண்ட நண்பன், 'அதை விட்டுவிட்டுத் திரும்பி வா' என்று குரல் கொடுத்தான். கரும்பொருளைக் கைப்பிடித்த நண்பன், 'நான் விட்டுவிட்டேன்; அது என்னை விடமாட்டேன் என்கிறதே' என்றான். உண்மையில் அந்தக் கரும்பொருள் கம்பளியன்று, ஒரு கரடி. அவன் விட்டாலும் கரடி அவனை விடுவதாக இல்லை. சாதி அந்தக் கரடி போன்றது. நாம் விட்டாலும் அது நம்மை விடுவதாக இல்லை.

> சாதி ஒழிப்பு இயக்கத்திற்குக் குறைந்தது 2,600 ஆண்டு வரலாறு உண்டு. எந்தப் போராட்டமும் இவ்வளவு நீண்ட நாள் நடந்தது கிடையாது. ஆனால் சாதி ஒழியவில்லை. நாம் சாதியை விட்டாலும் சாதி நம்மை விடுவதாகத் தெரியவில்லை. சாதிப் பிரிவினையை விட ஒரு பெரிய சாபக் கேடு ஒரு சமுதாயத்திற்கு வர முடியாது. அதிலிருந்து விடுபடும் வரை நமது சமுதாயத்திற்கு விமோசனம் இல்லை[8]

எனப் பேராசிரியர் வா.செ.குழந்தைசாமி தம் கருத்தினைச் 'சமுதாயச் சிந்தனைகள்' என்னும் உரைநடை நூலில் அழுத்தம் திருத்தமாக எடுத்துரைக்கின்றார்.

**தமிழகத்தில் தமிழனைக் காணவில்லை!**

இந்தியத் துணைக் கண்டம் சுதந்திரம் பெறுவதற்குச் சில ஆண்டுகளுக்கு முன் பெவர்லி நிக்கோலஸ் என்ற பத்திரிகை ஆசிரியர் இந்தியாவில் சுற்றுப் பயணம் மேற்கொண்டார். அதன் பின் 'இந்தியா: ஒரு தீர்ப்பு' (Verdict on India) என்ற ஒரு நூலை எழுதினார். அந்த நூலில் அவர், "நான், இந்தியாவில் இசுலாமியரைக் கண்டேன்; கிறித்தவரைக் கண்டேன்; சீக்கியரைக் கண்டேன்; பார்சியைக் கண்டேன். ஆனால் இந்தியனைக் காணவில்லை" என எழுதினார். அவர் இன்று இருந்து, தமிழகத்தில் ஒரு சுற்றுப் பயணம் மேற்கொள்வாராயின்,

'நான் தமிழகத்தில் வன்னியரை, நாடாரை, கவுண்டரை, தேவரை, யாதவரைக் கண்டேன்; தேவேந்திர குலத்தினரைக் கண்டேன். ஆனால் தமிழனைக் காணவில்லை' என்று எழுதி இருப்பார்[9]

எனக் குறிப்பிடுகின்றார் பேராசிரியர் வா.செ.குழந்தைசாமி.

மேலும் அவர்,

தமிழின உணர்வு, என்றும் இல்லாத அளவு இன்று சாதிப் புயலில் ஆடி, அசைந்து அணையா விட்டாலும் ஆற்றல் இழந்து, எண்ணெய் வறண்ட திரியில் எரியும் தீபம் போன்று காட்சியளிக்கிறது[10]

என்னும் பொருத்தமான ஓர் உவமை வடிவிலும் தம் கருத்தினைப் பதிவு செய்கின்றார்.

**சாதியின் தலைவர் என்னும் தவளைகள்**

சமுதாய அரங்கில் ஒரு காலத்தில் பீடும் பெருமையும் வாய்ந்த நாட்டுத் தலைவர்கள் உலா வந்தனர்; அடுத்த காலக் கட்டத்தில் மதிப்பும் மரியாதையும் மிக்க மாநிலத் தலைவர்கள் வலம் வந்தனர். இன்றோ கடுகு உள்ளம் கொண்ட சாதித் தலைவர்களே தெருவெல்லாம் கொடி பிடித்துக் கூக்குரல் இட்டுக் கொண்டிருக்கின்றனர்.

*இந்தியத் தலைமை யில்லை;*
*இனிவரும் தலைமு றைக்குச்*
*செந்தமிழ்த் தலைவர் என்னும்*
*சிறப்புளர் வருவதற் கில்லை;*
*சாதியின் தலைவர் என்னும்*
*தவளைகள் எழுப்பும் சத்தம்*
*காதினைப் பிளக்கும் தோற்றம்*
*காண்கிறேன்!*[11]

சாதித்த தலைவர்களின் காலம் எல்லாம் இன்று மலையேறி விட்டது; மாறாக, இது சாதித் தலைவர்களின் காலமாகிவிட்டது! அவர்களின் கூக்குரலுக்கு மழைக்காலத்தில் காதினைப் பிளக்கும் வண்ணம் தவளைகள் எழுப்பும் சத்தத்தை உவமையாகக் காட்டுகிறார் கவிஞர்.

## பகுத்தறிவுப் பகலவன் சிலையாய் நின்றது ஏன்?

நாடு முழுவதும் இன்று சாதிப் பேய் 'அங்கிங்கு எனாத படி எங்கும் பிரகாசமாய்'த் தலைவிரித்து ஆடுகின்றது. 'சாதிக் கொடுமையால் அருந்தமிழ்நாடு தேய்வது கண்டும் – நாடு தாழ்வுறச் செல்வது கண்டும் – செய்வதொன்று இலையோ?' எனத் தூய்மையும் துணிவும் சொல்லில் வலிமையும் வாய்மையும் நாளை வருவது காணும் தொலைநோக்கும் கொண்ட தலைவர்களிடம் வினவுகின்றார் குலோத்துங்கன்.

*செயலில், சிந்தையில், செலுத்தும் ஆட்சியின்*
*இயலில், தேர்தலில் எங்கும் சாதியே*
*உயர்வு கொண்டதே; ஒழிக்க இந்நிலை*
*முயல்வ தன்றிநாம் முடிப்ப தென்னவோ?*[12]

சாதி மேலாண்மையை முற்றிலுமாக ஒழிக்க முயலாமல், செய்து முடிக்கத் தக்க பணி வேறு எதுவும் இல்லை என்பது கவிஞரின் திட்டவட்டமான கருத்து.

தென்னகத்தின் ஒப்பற்ற தலைவர் – ஒரு நூறாண்டு திராவிடத்தின் வளர்ச்சிக்கே தன்னைத் தந்த தன்னிகரில்லாத் தமிழர் – சீர்திருத்தப் போர்ப் பெரியார் ஏன் சிலையாய் நின்றார் தெரியுமா? இதோ, கவிஞரே காரணம் கூறுகிறார்:

*. . . . . . சாதி*
*காலூன்றி வேரூன்றிப் புதுமை பெற்று*
*நிற்கின்ற நிலைகண்டார்; தமிழன் என்ற*
*நிறைகாணார்; நெஞ்சொடிந்து சிலையா னாரோ?*[13]

'இந்த மண்ணில் சாதி காலூன்றி, வேரூன்றி, புதுமை பெற்று நிற்கின்ற நிலை கண்டே நெஞ்சொடிந்து போய்ப் பெரியார் சிலையாய் நின்றார்' என்பது கவிஞரின் தற்குறிப்பேற்றம்.

## சாதி மனப்பான்மையால் மங்கும் மழுங்கும் தமிழின உணர்வு

மக்கள் மனங்களில் சாதி மனப்பான்மை வளர வளரத் தமிழின உணர்வு மங்குவதை– மழுங்குவதை – நாம் கண்கூடாகக் காண்கிறோம்; சாதிப் பற்றில் தமிழின உணர்வு கரைந்து வருவதையும் கண்முன்னே காண்கிறோம். இந் நிலை தொடருமாயின், தமிழினம் காலங்காலமாகப் பேணிக் காத்து வந்த தனது தனித்தன்மையை இழக்க நேரும்.

*சாதியில் பற்றும், தமிழின உணர்வும்*
*போதும் தகையன; முன்னது வளருமேல்*
*என்னருந் தமிழுக் கெதிர்வரு நாட்களில்*
*உன்னத நிலைமை உறுதியாய் இல்லை*[14]

என அறுதியிட்டு உரைக்கின்றார் குலோத்துங்கன். பிறிதொரு கவிதையில்,

*கொடுமையில் கொடுமையாய், நம்*
*குலத்திற்கே இழிவாய், நீங்கா*
*வடுவென அமைந்த தாய், நம்*
*வளர்ச்சியின் பகையாய் நிற்கும்*
*பழி: பெரும்பாவம் என்னப்*
*பார்த்தவை யனைத்தும் சேர்த்துப்*
*பிழியவந் துருவெடுத்த பிணி!*[15]

எனச் சாதிக் கொடுமையை அடையாளம் காட்டுகின்றார் கவிஞர். கொடுமையில் கொடுமை – நம் குலத்திற்கே இழிவு – நீங்கா வடு – வளர்ச்சியின் பகை – தீராப் பழி – பெரும்பாவம் – வருத்தும் பிணி எனச் சாதிக்கு எதிராகச் சரமாரியாகச் சாடல்களை அடுக்கிக் கூறுகின்றார் கவிஞர்.

சாதிப் பற்றுக்கும் தமிழின உணர்வுக்கும் இடையிலான மோதலின் உச்சகட்ட விளைவாக எதிர்வரும் நாட்களில் அருமைத் தமிழ் மொழிக்கு நேரவிருக்கும் பேரவலத்தை– இடரை – எண்ணி அஞ்சுகின்றார் குலோத்துங்கன்.

*தீக்குணம் அனைத்தி னுள்ளும்*
*தீயதாம் சாதிப் பற்றின்*
*நஞ்சினால் தமிழச் சாதி*
*நசியுமோ என்ப தெண்ணி*
*அஞ்சினேன்; அஞ்சினேன்*[16]

எனத் தம் அச்சத்தினைக் கவிதை ஒன்றில் பதிவு செய்துள்ளார் கவிஞர். இதற்குத் தீர்வு காணும் முயற்சியாக நம் அறிஞர்கள் – பெரியவர்கள் – சான்றோர்கள் – தூயவர்கள் – அனைவரும் ஒன்றாய் நின்று – ஒரணியில் திரண்டு – சாதி பேசும் நீசத்தை ஒழித்துக் கட்ட வேண்டும் – அடிவேரோடு சாதியினைத் தகர்க்க வேண்டும் – என அழைப்பு விடுக்கின்றார் கவிஞர். 'இந்தச் சாதனை இன்று காணும் தலைமை நம் தேவை' என்பது கவிஞரின் கணிப்பு.

**சம நீதிப் பாற்கடல்: வந்த சாதி நஞ்சு**

*ஆலகாலத்திற்கே*
*பாற்கடல் கடைந்தோம்*
*அமுதம் வந்தது*
*அவசரமாய்க் குடித்து*
*விக்கிச் செத்தோம்* (பால்வீதி)

என்பார் கவிக்கோ அப்துல் ரகுமான். 'இறப்பு எங்கள் பிறப்புரிமை' என்னும் முரண் சுவை ததும்பி நிற்கும் தலைப்பினை அவர் இக் கவிதைக்குச் சூட்டுவார்.

கவிஞர் குலோத்துங்கனும் பாற்கடல் கடைந்த தொன்மத்தைக் கையாண்டு தம் உள்ளக் கருத்தினைப் புலப்படுத்தியுள்ளார்.

*சமநீதிப் பாற்கடலை மீண்டும் மீண்டும்*
*சாதிஎனும் கயிறிட்டுக் கடைந்தீர்; மேலும்*
*அமுதேதும் காணவிலை; சாதி நஞ்சு*
*அனல்போல பரவுதடா! அணைப்பா ரில்லை*[17]

என்பது அவரது தொன்மப் படப்பிடிப்பு. அவரது பார்வையில் சமநீதி – பாற்கடல்; கடைந்தபோது வந்தது – சாதி நஞ்சு; அமுது ஒன்றும் வரவில்லை! இதே தொன்மத்தைப் பிறிதொரு கோணத்திலும் கையாண்டுள்ளார் குலோத்துங்கன்:

*அமுதூறும் என்றெண்ணிக்*
*கடைந்த பாலில்*
*அரவத்தின் நஞ்சன்று*
*விளைந்தாற் போன்று*

*சமுதாய நீதிக்கென்று*
*இறைத்த நீரில்*
*சாதியெனும் களைவளரும்*
*தன்மை கண்டோம்*[18]

அமுது ஊறும் என்று எண்ணிப் பாலைக் கடைந்த போது, பாம்பின் கொடிய நஞ்சு முன்பு விளைந்ததாம்; அதுபோல, சமுதாய நீதிக்கு என்று இறைத்த நீரில் இன்று சாதி என்னும் களை செழித்து வளர்கின்றதாம்!

**சாதித் தீயில் வேகும் தமிழினம்**

இன்று அரசியல்வாதிகள் சாதியை வரமெனத் தாங்குவர்; சாதியை வைத்துத் தலைவர் வாழுவர். இந்நிலையில்,

குலோத்துங்கன் 'இன்று சாதியை விடுத்த தமிழர் யாரடா?' என வினவுகின்றார்; 'சாதிகள் என்றடா தமிழகத்து ஒழிவது?' எனவும் வேதனையோடு கேட்கின்றார். இழிக்கும் சாதியின் கீழ்மையில் தமிழினம் கெடுவதும், உளுத்துத் தாழ்வதும் கண்டு நெஞ்சம் பொறுக்காமல்,

*நெருப்பின் மெழுகெனும் நெஞ்சொடும், நிறைந்த*
*பொறுப்பின் சுமையொடும் புகலுவம்; இஃது*

*சத்தியம்: வேரொடும், தளிரொடும், முளைக்கும்*
*வித்தொடும் சாதியை வீழ்த்துவ தின்றேல்*

*சாதித் தழல்தனில் தமிழினம் வெந்தது;*
*ஆதிக் குடியின் அமரரின் றாயினர்*[19]

எனப் பாடுகின்றார் கவிஞர். 'வேரொடும், தளிரொடும், முளைக்கும் வித்தொடும் சாதியை வெட்டி வீழ்த்த வேண்டும்; இன்றேல், சாதித் தழல்தனில் தமிழினம் வெந்து மடியும்' என எச்சரிக்கை செய்கின்றார் அவர்.

**சாதி என்னும் பழியறியாச் சமுதாயம்**

கவிஞர் என்ற முறையில் குலோத்துங்கன் காண விரும்பும் இலட்சியச் சமுதாயம் சாதி என்னும் பழியறியாதது:

*சாதி என்னும்*
*பழியறியாச் சமுதாயம்*
*படைத்து வாழ்வோம்*[20]

என்பது கவிஞரின் குறிக்கோள் முழக்கம்.

இனி ஒரு விதி செய்வோம் – அதை எந்த நாளும் காப்போம்: நம் அகராதியில் 'சாதி' என்னும் சொல் இருக்கட்டும் – 'வாழ்வில் எதையாவது சாதி' என்னும் பொருளைப் புலப்படுத்த. 'சாதித் தமிழ'னாக அல்லாமல், 'சாதிக்கும் தமிழ'னாக வாழ்வில் உயர்ந்து காட்டுவோம்; 'சாதனைத் தமிழ'னாகத் தடம் பதிப்போம்.

**குறிப்புகள்**

1. பாரதிதாசன் கவிதைகள், ப.165.
2. நல்வழி, 2.
3. சித்தர் பாடல்கள், ப.210.
4. மேலது, ப.9.
5. மேலது, ப.33.

6. பாரதியார் கவிதைகள், ப.268.
7. திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள் பகுதி–2, ப.778.
8. சமுதாயச் சிந்தனைகள், பக். 20–21.
9. மேலது, ப.22.
10. மேலது, ப.24.
11. குலோத்துங்கன் கவிதைகள், ப.250.
12. மேலது, ப.315.
13. மேலது, ப.318.
14. தினமணி 30, 31.05.1997.
15. சமுதாயச் சிந்தனைகள், ப.24.
16. குலோத்துங்கன் கவிதைகள், ப.326.
17. மேலது, ப.328.
18. மேலது, ப.330.
19. மேலது, பக்.322 – 324.
20. மேலது, ப.331.

# 7. 'மானுட யாத்திரை': அமைப்பும் அழகும்

## பாகம் 1: சமுதாயம், அரசியல்

> குலோத்துங்கன் கொடைகளுள் இது முதிர்தீங்கனி; முழுமையான ஒரு பணி. அகவை முதிர்ந்த நாள்களில், அனுபவம் முதிர்ந்த நாள்களில் படைக்கும் படையல். – ஊரன் அடிகள்[1]

வாழையடி வாழையெனத் தொடர்ந்து வரும் கவிஞர் வரிசையில் 'அறிவுயுகக் கவிஞர்', 'ஆய்வறிவுக் கவிஞர்' என்னும் சிறப்புப் பெயர்களால் கவிதை உலகில் சுட்டப் பெறுபவர் குலோத்துங்கன் (வா.செ.குழந்தைசாமி). 'தெள்ளத் தெளிந்த தமிழில், உண்மை தெரிந்து உரைப்பது' இவரது கவிதைக் கொள்கை; பாணி.

> குறுங்காவிய வகையில் ஒரு புதிய முயற்சி. தமிழன்னையின் பாதங்களில் வைத்துப் பணிவதில் மன நிறைவு கொள்கிறேன்[2]

என்னும் அறிமுகக் குறிப்புடன் கவிஞர் குலோத்துங்கன் படைத்துத் தந்திருக்கும் காப்பியம் 'மானுட யாத்திரை' (பிப்ரவரி, 2007). அதன் அமைப்பும் அழகும் குறித்து இவ்வியலில் சுருங்கக் காணலாம்.

### காப்பிய வடிவில் அமைந்த முதல் முயற்சி

எழுத்தாளர் இந்திரா பார்த்தசாரதி தம் அணிந்துரையில் குறிப்பிடுவது போல்,

> கவிஞர் குலோத்துங்கன், 'மானுட யாத்திரை' என்ற இக் காப்பியத்தில், மனிதனின் சமூகப் பரிணாம வளர்ச்சியை, வரலாற்றைக் கவிதை மூலமாகத் தருகிறார். மனித நாகரிக வரலாற்றைக் காப்பியமாகக் கவிதை வடிவில் காண்பது இதுதான் முதல் முயற்சி. கவிதை உருவத்தில் பரந்து பட்ட களத்தில் மனித நாகரிக வரலாற்றைக் காணும் முதல் படைப்பாளி குலோத்துங்கன் ஆவார்.[3]

மகாகவிகள் படைத்துள்ள பெருங்காப்பியங்களுக்கும் குலோத்துங்கனின் 'மானுட யாத்திரை'க்கும் இடையே

அடிப்படையில் குறிப்பிடத்தக்க வேறுபாடு உண்டு. பெருங்காப்பியங்களில் தன்னேரிலாத தலைவர்கள் இடம்பெறுவர்; அவை நாடு, நகர், காதல், வீரம், போர் முதலான பல்வேறு பரிமாணங்களைக் கொண்டிருக்கும். 'மானுட யாத்திரை'யோ மானிட இனத்தின் மகத்தான கூறுகளைத் தன்னகத்தே கொண்ட ஒரு வாழ்க்கைக் காப்பியம். அது ஒரு நீண்ட பயணத்தின் படப்பிடிப்பு. தொடர்ந்து முன்னேறும் பயணம்: முடிவில்லாத பயணம்.

'மானுட யாத்திரை' காப்பியத்தில் இன்றியமையாத இடத்தைப் பெறுபவன் மனிதன். மனிதனைக் குறித்தும் அவனது வாழ்வு குறித்தும் படிப்பவரது சிந்தனையைத் தூண்டும் விதத்தில் குலோத்துங்கன் காப்பியத்தில் ஆங்காங்கே வெளியிட்டுள்ள சில அரிய கருத்துக்கள் வருமாறு:

*விந்தைகள் அனைத்தி னுள்ளும்*
*வியன்மிகு விந்தை, மாந்தர்*
*சிந்தையென் றுலகு கூறும்*
*செழும்பொருள்* (1:9)

*கருவிகள் படைப்போன் மாந்தன்*
*கருவியால் உயர்வோன் மாந்தன்* (1:24)

*மாந்தர்*
*வாழ்வொரு மர்மம்; வாழும்*
*மனிதனோர் மர்மம் அம்மா!* (1:36)

*இவண் கால மெல்லாம்*
*புதியன புலர்தல் காணும்*
*மதிநலம் சூடும் வாகை*
*மானுடர் வாழ்க்கை யம்மா!* (1:40)

மாந்தரைக் குறித்தும், மானுடர் வாழ்க்கை குறித்தும் குலோத்துங்கன் வெளியிட்டுள்ள இக் கருத்துக்கள் அவரது அறிவியல் பார்வையையும் ஆழ்ந்த பட்டறிவையும் ஒருங்கே புலப்படுத்துவனவாகும். "மனிதன் இன்றேல் குறையுள தாகும் அண்டம்; குடிமகன் அவனே யன்றோ!" (3:1139) என 'மானுட யாத்திரை' மூன்றாம் பாகத்தின் முடிவிலும் மனிதனின் மாண்பினை எடுத்துரைப்பார் கவிஞர். ஒரு வகையில் பார்த்தால், சிலப்பதிகாரம் போல 'மானுட யாத்திரை'யும் 'குடிமக்கள் காப்பிய'மாகத் தோன்றுகிறது.

## இயற்கை வணக்கம்

தமிழின் முதல் காப்பியமான சிலப்பதிகாரம், ஞாயிறு, திங்கள், மாமழை ஆகியவற்றைப் போற்றித் தொடங்கும்; காப்பிய மரபில் இறை வணக்கத்திற்கு நிகராக 'இயற்கை வணக்கம்' என்ற புதிய கருத்தியலுக்கு அடியெடுத்துக் கொடுத்த பெருமை இளங்கோ அடிகளையே சாரும். அடிகளை அடியொற்றிக் குலோத்துங்கனும் தம் 'மானுட யாத்திரை'யை இயற்கையை வணங்கித் தொடங்கியுள்ளார். "தேடுநர் தேடத் தேடச் செல்வங்கள் உவந்(து) அளிக்கும் பீடுள பொருளே" (1:1) என்பது கவிஞர் இயற்கைக்குச் சூட்டும் புகழாரம். "வய்யந் தன்னில், மாந்தரொ(டு) உயிர்கள் யாவும், வளமுடன் வாழச் செய்தாய்" (1:4–5) என இயற்கையை நெஞ்சாரப் போற்றிப் பரவும் கவிஞர், முத்தாய்ப்பாக, "சாந்தமொன் றரும்ப, அம்மா சமரசம் மலரச் செய்வாய்" (1:5) என இயற்கை அன்னையிடம் ஓர் உயரிய வேண்டுகோளையும் முன்வைக்கின்றார். நாட்டில் எங்கணும் – எல்லோருடைய வாழ்விலும் – சாந்தமும் சமரசமும் நிலவ வேண்டும் என்பது கவிஞர் குலோத்துங்கனின் விருப்பம்.

## மானுட யாத்திரையின் மகத்துவம்

மானுட யாத்திரையின் மகத்துவத்தைத் தம் கவிதைப் படைப்பு ஒன்றின் கருப்பொருள் ஆக்க வேண்டும் என்ற விருப்பம் நீண்ட நாட்களுக்கு முன்பே கவிஞர் குலோத்துங்கனின் நெஞ்சில் கால்கொண்டிருந்தது. இதனை அவரது வாய்மொழி கொண்டே உய்த்துணர முடிகின்றது. அவர் 1985–ஆம் ஆண்டில் எழுதிய கவிதை ஒன்றிலேயே, "மேதினியின் யாத்திரையில் யாண்டும் நடப்பேன்; எம் யாத்திரையைக் காவியமாய்ப் பாடுவதில் யாமடையும் பரவசத்தை யாரறிவார்"[4] எனக் குறிப்பிட்டுள்ளார். 'மானுட யாத்திரை' காப்பியத்திற்கு எழுதிய முன்னுரையிலும் குலோத்துங்கன்,

> மானுட யாத்திரையின் மகத்துவத்தை எண்ணும் பொழுது வியப்புணர்வு வெள்ளம் போல் பெருக்கெடுக்கிறது. மானுட யாத்திரைக்கு இணையான மாபெரும் பயணம் வேறு இல்லை[5]

எனத் தம் உள்ளக் கருத்தினைத் தெளிவுபடுத்தியுள்ளார். கவிஞர் குலோத்துங்கனின் கருத்தின்படி, மானுட யாத்திரையின் பொருண்மையில் மூன்று முக்கியமான கூறுபாடுகள் இடம்பெறுகின்றன. அவை வருமாறு: பாகம் 1: சமுதாயம், அரசியல்,

பாகம் 2 : அறிவியல், பாகம் 3: ஆன்மிகம், சமயம்.

'சமுதாயம்: அரசியல்' என்னும் முதல் பாகத்தில், காட்டில் வேட்டையாடி, விலங்கெறிந்த காலம் முதல், கல்வி யுகச் சமத்துவம் வரையிலான இன்றியமையாத நிகழ்வுகள் சுருக்கமாகச் சுட்டிக் காட்டப்பட்டிருக்கின்றன. இயன்ற வரை பெயர் குறிப்பிடப்படாது பொதுமையான நோக்கில் மனித சமுதாய நிகழ்வுகள் இப் பாகத்தில் கவிஞரால் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. 'இயற்கை வணக்க'த்துடன் தொடங்கும் இப்பாகம், 'முடிவில்லாப் பயண'த்தில் முடிவடைவது குறிப்பிடத்தக்கது.

> இரண்டாம் பாகத்தில் இடம்பெற இருப்பது அறிவியல்... மனித சமுதாயத்தின் ஒவ்வொரு முன்னேற்றமும் அவன் படைத்த புதிய கருவிகளின் அடிப்படையில் அமைந்தது தான்... கலப்பை முதல் கணிப்பொறி வரையிலான வளர்ச்சி 'அறிவியல்' எனும் பாகத்தில் பேசப்படும்[6]

என்றும்,

> 'இறந்த பின் மிஞ்சி இருப்பது எதுவும் இல்லை' என்ற உலகாயதத்தில் இருந்து, 'ஆன்மா என அழிவில்லாத ஒன்று இருக்கிறது' என நம்பி, அதைப் பற்றி ஆயிரம், ஆயிரம் விளக்கங்கள் கொடுத்திருக்கும், கொடுத்து வரும் சமயங்கள் வரை மனிதனின் அக வாழ்வு பற்றிய சிந்தனைகள் 'ஆன்மிகம்: சமயம்' என்னும் பாகத்தில் பேசப்படும்[7]

என்றும் கவிஞரே முதல் பாகத்தைத் தொடர்ந்து அடுத்து வெளிவர இருக்கும் இரு பாகங்களின் பொருண்மைக் கூறுகள் குறித்துக் கோடிட்டுக் காட்டியுள்ளார்.

## இல்லற இனிமையும் குழந்தை இன்பமும்

'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை' (திருக்குறள் 49) எனத் தெள்ளத் தெளிவாகவும் திட்பமாகவும் எடுத்துரைப்பார் வள்ளுவர். குலோத்துங்கனும் வள்ளுவரின் அடிச்சுவட்டில், 'இல்லறம், குடும்பம் விஞ்ச எதனை நாம் கண்டோம்?' என வினவுகின்றார்; 'அன்பில் உள்ளமும் உயிரும் ஒன்றும், உறவுகள் படைக்கும் இன்பம் விண்ணினு மில்லை' (1:54) என அழுத்தம் திருத்தமாக மொழிகின்றார்.

*மனையிடை மாட்சி யுண்டேல்*
*மானுடம் உயரும்* (1:58)

என்பது கவிஞரின் கொள்கை முழக்கம்.

இல்லற வாழ்வின் பயனான குழந்தை இன்பத்திற்கும் குலோத்துங்கன் தம் காப்பியத்துள் உரிய இடத்தினை நல்கியுள்ளார். 'மழலையின் இனிமை விஞ்ச, வானத்து அமிழ்தம் இல்லை... ஆடியும் அசைந்தும், சின்ன அடியெடுத் தருகில் வைத்தும், கூடிய கலகலப்பும், குறுநடை அழகும் மிஞ்ச நாட்டிய உலகு கண்ட நடனமொன் றில்லை: பொற்புத் தேட்டினில் மலரின் மென்மைச் செவ்விதழ் சிரிப்பை மிஞ்சும் காட்சி யாம் கண்டதில்லை: களங்கமொன் றறியாத் தூய்மை ஆட்சி ஓர் வடிவம் கொண்ட அரும்பொருள்' (1:59–62) என்பது குழந்தை இன்பம் குறித்துக் கவிஞர் தீட்டியிருக்கும் கவின்மிகு சொல்லோவியம் ஆகும்.

**போதும் என்று எண்ணும் நெஞ்சம், புதியன செய்வதில்லை!**

'போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து' என்னும் முன்னோர் வாக்கைக் கவிஞர் குலோத்துங்கன் ஏற்கவில்லை. அக் கருத்தில் அவருக்கு உடன்பாடும் இல்லை. 'உயர்வு நாடும் உள்ளம் ஒருபோதும் அதனை ஏற்பதில்லை' எனக் கருதுகிறார் அவர். "போதுமென் றெண்ணும் நெஞ்சம், பொன்செயக் கூடும்: ஆனால் போதுமென் றெண்ணும் நெஞ்சம், புதியன செய்வ தில்லை" (1:28) என்பது கவிஞரின் அழுத்தமான கருத்து.

இருப்பதில் நிறைவு காணாமல், எடுத்ததில் முழுமை காணும் விருப்பத்துடன், எப்போதும் உண்மை தேடும் வேட்கையுடன், தாம் கருதுவது அனைத்தும் கண்ணில் காண்பது என்ற உறுதியுடன், நாளும் அடியெடுத்து வைத்து அயர்வு இல்லாமல் கடுமையாக உழைத்திடும் மாந்தரையே குலோத்துங்கன் போற்றுகின்றார். "வானமே கிட்டினாலும், மற்றுமோர் உலகு தேடும், ஞானமும் மனமும் கொண்டார், ஞாலத்திற்கு உயர்வு தந்தார்" (1:31) என அத்தகைய பீடும் பெருமையும் வாய்ந்த மாந்தருக்குப் புகழாரம் சூட்டுகின்றார் கவிஞர். 'தேடுதல் மனித சாதி செய்திடும் பயணம்' (1:32) எனச் சுட்டும் கவிஞர், 'அமரரும் விழையும் வாழ்வை, மண்ணிதிற் சமைக்க வெண்ணும், மானுடப் பயணம்' (1:33–34) என அதன் இலக்கினையும் அழகுற வரையறை செய்திருப்பது மனங்கொளத்தக்கதாகும்.

## வெல்லும் சொற்களின் வியத்தகு ஆட்சி

வெல்லும் சொற்களை வியத்தகு முறையில் கையாண்டு நுண்பொருள்களுக்கு வரைவிலக்கணம் வகுக்கும் கலையில் கவிஞர் குலோத்துங்கன் கைதேர்ந்தவராக விளங்குகின்றார். இவ் வகையில் மனங்கொளத் தக்க சில அழகிய, சின்னஞ்சிறு வரைவிலக்கணங்கள் இதோ:

*'குடிமையின் மூலக்கூறு: குடும்பம்'*
*'காதல் : கலைகளின் ஊற்று'*
*'இசை : இறைவனின் மொழி'*
*'அணையாத் தீபம் : கல்வி'*
*'மறுமலர்ச்சி : மக்களிடையே விழிப்பு'*
*'சமதர்மம் : சமத்துவம்; சரிதையின் கனவு'*
*'அறிவெனும் ஒளியின் தீபம்: அனுபவம்'*

அடிப்படையில் ஓர் அறிவியலாளராக விளங்குவதால், இச் சதுரப்பாடு கவிஞருக்கு எளிதில் வாய்த்தது எனலாம்.

## நெஞ்சை அள்ளும் உவமை நலம்

'உவமையும் பொருளும் ஒத்தல் வேண்டும்' என்னும் உவமவியல் நூற்பாவுக்கு (8) எழுதிய உரை விளக்கத்தில்,

*உவமானமும் பொருளுந் தம்மின் ஒத்தனவென்று*
*உலகத்தார் மகிழ்ச்சி செய்தல் வேண்டும்*

என நயமாக எழுதிச் செல்வார் பேராசிரியர். இக் கருத்துக்கு இலக்கியமாக 'மானுட யாத்திரை'யில் இடம்பெற்றுள்ள முத்தான மூன்று உவமைகள் வருமாறு:

*வாழ்வில்*
*நேர்மையர் உள்ளம் போல*
*அசைவிலா மலைகள்...* (1:104)

*மின்னலும் இடியுமின்றி*
*மேகங்கள் பொழிவ தில்லை;*
*இன்னலும் இழப்புமின்றி*
*என்றுமே புரட்சி இல்லை* (1:256)

*வையத்தின் மனவ ளத்தை*
*மிகுத்தவர் தோன்றினார் பின்*
*விண்ணிடைத் தாரகை போல்* (1:273)

இங்ஙனம் உவமையும் பொருளும் தம்மில் ஒத்தன என்று உலகத்தார் உவகை கொள்ளும் உவமைகள் குலோத்துங்கனின் படைப்புக்களில் மண்டிக் கிடக்கின்றன.

**வையம் வாழக் கவிஞர் முன்மொழியும் வழிமுறை**

உலக வரலாற்றின் பக்கங்களைப் புரட்டிப் பார்த்தால், இதுவரை எத்தனை முறை போர் நெருப்பு கொழுந்து விட்டு எரிந்து, கூற்றுவன் கொடுநடம் புரிந்திருக்கிறான் என்பது தெரிய வரும்; 'மானுடம் தேம்பிய மாபெரும் போர்கள்' என்னும் இயலில் இதனை உருக்கமான மொழியில் பதிவு செய்துள்ளார் குலோத்துங்கன். 'போரில் வலியவர் வென்றார்: நின்று மானுடம் தேம்பிற் றம்மா!' (1:350) என்னும் கவிஞரின் கூற்று அவலத்தின் மணிமுடி ஆகும். உலக நாடுகளின் விடுதலை வரலாறுகளைக் குறித்து ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தால் புலனாகும் உண்மை ஒன்று உண்டு: கல்வியோ, கலையோ, அன்பின் கடவுளர் நினைவோ, பேசும் பல்வகை மதமோ, ஆயும் பகுத்தறிவுணர்வோ மற்றும் அறிவியல் தெளிவோ, ஆன்ற ஆன்மிக உணர்வோ போர்த் தீ எரிவதைத் தடுக்கவில்லை; இழப்பினைத் தவிர்க்கவில்லை. பின் வையம் வாழ்வதற்கான வழி முறைதான் யாது? சிக்கலான இவ் வினாவுக்குக் குலோத்துங்கன் தரும் சீரிய விடை இதோ:

*அகிம்சையின் முனிவர் காந்தி*
*அடிகளார் தத்து வத்தின்*
*மகிமையில் புதிய பாதை*
*மலர்ந்திடின் வையம் வாழும்* (1:361)

காந்தி அடிகள் காட்டிய அகிம்சைத் தத்துவத்தின் வழியில் நடை பயின்றால் உலகில் போர்த் தீ அவியும்; அமைதி நிலவும். கவிப்பேரரசர் கம்பர் கூறுவது போல், 'யாரொடும் பகைகொள்ளலன் என்ற பின் போர் ஒடுங்கும், புகழ் ஒடுங்காது!'

**நாளை தரணி ஓர் சுவர்க்கம்**

மானிட இனத்தின் நீண்ட, நெடிய வாழ்க்கைப் பயணத்தில் எத்தனை தடைகள் குறுக்கிட்டாலும் – துன்பங்கள் அணிவகுத்து வந்து தாக்குதல் நிகழ்த்தினாலும் – தொல்லைகள் ஒன்றுசேர்ந்து வந்து நெருக்கினாலும் – எல்லாவற்றையும் தடந்தோள் கொண்டு எதிரேற்று, மன வலியால் வென்று, நாளும் உயர்வெனும் சிகரம் நோக்கி நடை பயில வேண்டும் என்பதே குலோத்துங்கனின் உயிர்க் கொள்கை; உயரிய குறிக்கோள். அவரது கருத்தில் மானுட யாத்திரை என்னும் 'முடிவில்லாப் பயண'த்தின் முடிந்த பயன் 'நாளை தரணி ஓர் சுவர்க்கம்' (1:369) என்பதாகும்.

# பாகம் 2 : அறிவியல்

*மனிதரைப் பாடு வேன்யான்*
*வய்யத்திற் குயர்வு தேடும்*
*புனிதரைப் பாடு வேன்யான்*[9]

என்னும் உயரிய கொள்கை முழக்கத்துடன் பல்லாண்டுக் காலமாகக் கவிதை உலகில் வலம் வந்து கொண்டிருப்பவர் குலோத்துங்கன் (வா.செ.குழந்தைசாமி). அவரது கருத்தில் மானுட யாத்திரைக்கு இணையான மாபெரும் பயணம் வேறு இல்லை. ‘மேம்படும் பயணம்’ (2: 14, 27) என்றும், ‘பாதையில் இன்பம் காணும் பயணம்’ என்றும், ‘புதியதோர் பயணம்’ (2:70) என்றும் தம் கவிதைகளில் ஆங்காங்கே அப்பயணம்பற்றிக் குறிப்பிட்டுள்ளார் கவிஞர்.

## மானுட யாத்திரையின் மாண்பு

மானுட யாத்திரையின் மாண்பினைப் பாடுபொருளாகக் கொண்டு குலோத்துங்கன் படைத்திருக்கும் காப்பியம் ‘மானுட யாத்திரை’. இதன் பொருண்மையில் இடம்பெறும் முக்கியமான மூன்று கூறுபாடுகள் வருமாறு:

பாகம் 1 : சமுதாயம்: அரசியல்

பாகம் 2: அறிவியல்

பாகம் 3: ஆன்மிகம்: சமயம்

‘சமுதாயம்: அரசியல்’ என்னும் காப்பியத்தின் முதல் பாகம் 2007–ஆம் ஆண்டில் பிப்ரவரித் திங்களில் வெளிவந்தது; ‘அறிவியல்’ என்னும் ‘மானுட யாத்திரை’க் காப்பியத்தின் இரண்டாம் பாகம் அதே ஆண்டில் டிசம்பர்த் திங்களில் வெளிவந்துள்ளது. இதில் ஏறத்தாழ எண்ணாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஓர் அடையாளம் தெரியாத மேதையால் கண்டுபிடிக்கப் பெற்ற கலப்பை முதலாக அண்மைக் காலக் கண்டுபிடிப்பான கணிப்பொறி வரையிலான வளர்ச்சி நிலைகள் பேசப்பட்டுள்ளன. அறிவியல் அறிஞர் ஆல்ஃப்ரட் வாலஸின் (Alfred Wallace) கருத்தின்படி, உலக உயிர்களுள் மனிதன் மட்டுமே கருவிகளைப் படைக்கும் திறமை பெற்றவன் ஆவான்.

*தேவர்கள் கண்ட தில்லாத்*
*தெய்வங்கள் படைத்த தில்லா*
*மாவரும் திறமை ஒன்று*
*மானுடர்க்கு உண்டாம்: அஃது*
*கருவிகள் படைக்கும் ஆற்றல்* (2:22–23)

எனக் கவிஞர் குலோத்துங்கனும் மனிதனின் இந்த மாபெரும் ஆற்றலுக்குப் புகழாரம் சூட்டுவார். மேலும் அவர்,

*கனவுகள் காண்ப தன்றி*
*வருவது தெளியும் ஆற்றல்*
*வருவதை வகுக்கும் ஆற்றல்*
*பெற்றவன் மனிதன்: இந்தப்*
*பேறுளர் பிறர் யார்?* (2:23–24)

என மானுடர் மாண்பினைப் போற்றியும் பாடுவார்.

இன்னும் குறிப்பாகவும் சிறப்பாகவும் குறிப்பிட வேண்டும் என்றால், மனித சமுதாயத்தின் ஒவ்வொரு முன்னேற்றமும் அவன் படைத்த புதிய கருவிகளின் அடிப்படையில் அமைந்ததுதான். கருவிகளின் வரிசை தன்னில் கலப்பையே (Tractor) முதல். 'கலப்பையைக் கண்ட மேதை, காவியப் பெருமை உள்ளோன்' (2: 43) என்பது குலோத்துங்கனின் நெஞ்சார்ந்த பாராட்டு. இத்தகைய சிறப்பு வாய்ந்த கலப்பையின் துணைக்கொண்டு உருவானது தான் வேளாண்மை யுகம். 18–ஆம் நூற்றாண்டின் முக்கிய நிகழ்வான தொழில் புரட்சியை (Industrial Revolution) முன்னெடுத்துச் செல்ல உதவிய கருவி நீராவி எந்திரம் (Steam Engine). அக் கருவி தோற்றுவித்ததுதான் தொழில் யுகம். கலப்பை, நீராவி எந்திரம் என்னும் இரு கருவிகளுக்கும் மேலாக, மனிதனது சிந்தனையில் பங்கு பெறும் திறனைப் பெற்றது கணிப்பொறி (Computer). 'இறைவனின் மறுபிறப்பு என்று அனைவரும் புகழ்ந்து போற்றும் ஆற்றலின் வடிவம்' (2: 549) இணையம் (Internet). கணிப்பொறியின் உதவியால் உருவாகி இருப்பது அறிவு யுகம் (Knowledge Era). இங்ஙனம் கலப்பையில் தொடங்கிக் கருவிகள் ஒவ்வொன்றாகப் பலபடப் புனைந்து வாழ்க்கைப் போரில் வெற்றி கண்டிருக்கிறான் மனிதன்.

**உண்மை வணக்கம்**

'மானுட யாத்திரை'யின் முதல் பாகம் 'இயற்கை வணக்க'த்துடன் தொடங்கப் பெற்றது. அதன் இரண்டாம் பாகம், 'அறிவியல்' என்னும் தன் கருப்பொருளுக்கு ஏற்ப 'உண்மை வணக்க'த்துடன் தொடங்கப் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது.

*ஒண்மையின் ஒளியில் தோன்றும்*
*ஒப்பிலாப் பொருளே! வய்யம்*
*உண்மை என்றுவந்து கூறும்*
*உயர்வுடைப் பரமே* (2:1)

என்று ‘உண்மைக்கு வணக்கம்’ கூறித் தம் காப்பியத்தைத் தொடங்கியுள்ளார் குலோத்துங்கன். இதே போல, ‘தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன், மெய்வருத்தக் கூலி தரும்’ (குறள் 619) என்னும் வள்ளுவர் வாக்கில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டவர் குலோத்துங்கன். எனவே,

*இம்பரர் வாழ்வில் என்றும்*
*முயற்சியின் துணை யிலாது*
*முடிப்பதொன் றில்லை* (2:7)

என ‘வல்லுநர்க்கு வரம்’ என்னும் இயலில் கவிஞரும் வள்ளுவர் வழியில் மனித முயற்சிக்கு மணி மகுடம் சூட்டியுள்ளார். காப்பியத்தில் பிறிதோர் இடத்திலும் கவிஞர்,

*முன்புநாம் சொன்னோம்: மண்ணில்*
*முயற்சிக்கு முடிவொன் றில்லை*
*ஒன்றுசெய் துயர்ந்த காலை*
*ஒன்பது புதிதாய்த் தோன்றும்* (2:509)

என முயற்சியின் பெருமையை வானளாவப் போற்றிப் பாடியுள்ளார்.

## இயற்கையோடு இயைந்த ஏற்றம்

மனிதன் இயற்கையை எதிர்த்து நின்று எதையும் சாதிக்க இயலாது; இயற்கையின் இயல்பறிந்து, இயற்கையோடு இயைந்து ஏற்றம் காண முயல்வதே நன்று எனக் கருதுகின்றார் குலோத்துங்கன். ‘இயற்கை அன்னை’ (2: 48; 184; 585) என்பது அவரது கவிதைகளில் பயின்று வரும் ஓர் உயிர்த் தொடர் ஆகும். இயற்கை அன்னை யாருக்கு வரம் தருவாள் என்னும் வினாவுக்குக் கவிஞர் தரும் விடை இதுதான்:

*திண்மையும், உழைப்பும், தாழாச்*
*சித்தமும், திறனும் சேர்ந்த*
*வல்லுநர்க்கு அன்றோ அன்னை*
*வரம்தரும் இயல்பு கொண்டாள்.* (2:12–13)

கவிஞரின் கருத்தியலில், அனைத்துத் திறன்களும் ஒருங்கே பெற்ற வல்லுநர்க்கே வரம் நல்குவாள் இயற்கை அன்னை. இதில் மந்திரமோ மாயமோ தந்திரமோ ஒரு சிறிதும் இல்லை; தன் திறனை நம்பித் தலைநிமிர்ந்து நடந்தால் மனிதன் வாழ்வில் சாதனை படைக்கலாம்; முத்திரை பதிக்கலாம். இன்னும் விளக்கமாகச் சொல்ல வேண்டும் என்றால்,

*நிறைவொடு மனித சாதி*
*நெஞ்சகத் தாழ்ந்து கண்ட*
*முறையுள குறிக்கோள் ஒன்றை*
*முன்னர்வைத் ததனைத் தேடி*
*உழைப்பதும், வெற்றி காணும்*
*உறுதியின் தெளிவில் உள்ளம்*
*திளைப்பதும், ஒத்த இன்பம்*
*திருப்திவே றெதிலு மில்லை* (2:15–16)

என முடிந்த முடிபாகக் கூறுகின்றார் குலோத்துங்கன். மேலும் அறிஞர் உண்மை என்று கண்டது, 'தெரிதலும், உள்நுழைந்து தேடலும், இமையும் சற்று அயர்வின்றி, அலுப்பொன்றின்றி, அறிதலும் குறிக்கோள் ஆன, உயர்பொருள் ஒன்றே அஃது உண்மை' (2: 35–36) என அழுத்தம் திருத்தமாக உரைக்கின்றார் கவிஞர்.

## வாழ்நாள் உயர்ந்திடும் வழிகள்

வாழ்வின் இறுதி என்று இயற்கை கண்ட இறப்பினை வென்ற மனிதன் இல்லை. 'இறைவனும் நிலத்தில் தோன்றின், இறப்பது தவிர்த்தற் கில்லை, முறையிது: மனிதன் இந்த முடிவினை எதிர்த்தற் கில்லை' (2:58) எனக் கருதுகின்றார் குலோத்துங்கன். எனினும் இந்த நூற்றாண்டு மனிதன் எப்படியேனும் தன் வாழ்நாள் உயர்ந்திடும் வழிகள் காண்பான் என உறுதியாக நம்புகிறார் அவர்.

*நூறெனும் எல்லை தாண்டும்*
*நுண்மைகள் ஆய்ந்து வெல்லும்*
*ஆறது காணும் காலம்*
*அண்மை; ஓர் ஐயம் இல்லை* (2:59)

என்பது கவிஞர் இக்காப்பியத்தின் வாயிலாக அறுதியிட்டு உரைக்கும் அரியதொரு கொள்கை முழக்கம் ஆகும்.

## அறிவியல் வானில் அறநெறியின் ஆட்சி

ஒரு கவிஞர் என்ற முறையில் குலோத்துங்கன் 'அறிவியல் எனும் பேராற்ற'லைப் பெரிதும் மதிக்கின்றார்; அறிவியல் அறிஞர்களையும் அவர்களது கண்டுபிடிப்புகளையும் வானளாவப் போற்றுகின்றார். ஆனால் அதே நேரத்தில் அறிவியல் 'ஆற்றுநர்க்கு ஏவல் செய்யும் நெறியுடைய கருவி' என்பதில் இருந்து வழுவி, அழிவுச் சக்தியாகச் செயல்படுவதில் அவருக்குச் சற்றும் உடன்பாடு இல்லை; 'தருமமே அழுத நேரம்' என்னும் இயலில் அறிவியல் ஆற்றல் பற்றிய தம் கருத்தினைத் தெள்ளத் தெளிவாகப் பதிவு செய்துள்ளார் கவிஞர்.

*அறிவியல் ஆற்றல் ஊற்(று)*
*ஆக்கிடும்; அழிக்கும்; காக்கும்:*
*அறிவியல் வானில் யாண்டும்*
*அறநெறி ஆள வேண்டும்* **(2:559)**

என்பதே கவிஞர் குலோத்துங்கனின் எண்ணமாகவும் எதிர் பார்ப்பாகவும் உள்ளது. நிறைவாக, 'நலமென்றும் காண்பம் என்னும் நம்பிக்கை மனிதம்' என்னும் காப்பியத்தின் முடிவு இயலிலும் கவிஞர் தம் நம்பிக்கையை அழுத்தமாக வெளியிட்டுள்ளார்:

*. . . . . . . . . . . . . . . நீண்ட*
*அறநெறி மரபை மாந்தர்*
*மிஞ்சுவர் இல்லை: வையம்*
*மேற்செலும்: மேலும் செல்லும்* **(2:609)**

இவ்வகையில் குலோத்துங்கன் தம்மை ஓர் உடன்பாட்டுச் சிந்தனையாளராகவே இனங்காட்டியுள்ளார்.

**கலைச்சொல்லாக்கங்களும் அறிவியலாரின் கண்டுபிடிப்புகளும்**

'மானுட யாத்திரை'யின் இரண்டாம் பாகமான 'அறிவிய'லை மனம் கலந்து பயில்வோர்க்குக் கிடைக்கும் நன்மைகள் இரண்டு. அவையாவன:

1. அருமையான அறிவியல் கலைச்சொல்லாக்கங்கள்: கவிஞர் குலோத்துங்கன் அறிவியல் துறையில் தடம் பதித்த ஓர் அறிஞராகவும் விளங்குவதால், தம் கவிதையில் ஆங்காங்கே அழகிய அறிவியல் கலைச்சொல்லாக்கங்களைக் கையாண்டுள்ளார்; அடிக்குறிப்பில் அவற்றிற்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும் சுட்டிக்காட்டியுள்ளார். அறிவுக்கு விருந்தாகும் சான்றுகள் சில வருமாறு:

| | | |
|---|---|---|
| வளியம் | – | Gas |
| உயிரி | – | Organism |
| உயிரணு | – | Cell |
| இருப்பெனும் நிலை | – | Static Condition |
| இயங்குதல் நிலை | – | Dynamic Condition |
| மூலக்கூறு | – | Molecule |
| மின்னாக்கி | – | Dynamo |
| பரிணாம வளர்ச்சி | – | Evolutionary Process |

| | | |
|---|---|---|
| ஈர்ப்பு | – | Gravity |
| நிற நிரல் கருவி | – | Spectroscope |
| வளைவுளவில்லை | – | Lens |
| காண்டல் | – | Invention |
| புனைதல் | – | Innovation |
| தொலைநோக்கி | – | Telescope |
| நுண்மை நோக்கி | – | Microscope |
| மின் அலை | – | Electrical Wave |
| மின் காந்த அலை | – | Electro Magnetic Wave |
| பரப்பி | – | Transmitter |
| ஏற்பி | – | Receiver |
| நொதித்தல் | – | Fermentation |
| நொதி | – | Enzyme |
| சுழி | – | Zero |
| விழாக்கல் | – | Milestone |
| பால்வெளி | – | Milky way |
| காலம் | – | Time |
| வெளி | – | Space |
| பருப்பொருள் | – | Matter |
| அலகு | – | Unit |
| ஆற்றல் | – | Energy |
| தனிமம் | – | Element |
| ஓங்கி | – | Dominant |
| ஒடுங்கி | – | Recessive |
| உயிரினம் நகல் | – | Cloning |
| பயிரின மரபு மாற்றம் | – | Transgenic Plant |
| இணையம் | – | Internet |
| தளைந்திடல் | – | Dependent |
| தாய் உயிரணு | – | Stem cell |

2. கெலிலியோ (Galileo), நியூட்டன் (Newton), மார்க்கோனி (Marconi), ஆர்க்கிமிடீஸ் (Archimedes), டால்டன் (Dalton), டார்வின் (Darwin), ஆர்ம்ஸ்ட்ராங் (Armstrong), ஃப்ராங்க்லின் (Franklin) முதலான அறிவியல் தொழில் நுட்பப் பேரறிஞர் களையும், அவர்களது அரும்பெரும் கண்டுபிடிப்புகளையும் கொள்கைகளையும் கவிதை வடிவில் அழகிய தமிழில் இப் பாகத்தில் அறிமுகம் செய்துள்ளார் குலோத்துங்கன்.

அவர்களை 'ஆய்வுத் தவசிகள்' (2: இயல் 8) என்றும், 'அறிவியல் தவத்தர்' (2:71) என்றும், 'அறிவியல் ஞானி' (2:255) என்றும், 'பேரறிவாளன்' (2:274) என்றும் எழில்நலம் வாய்ந்த தொடர்களால் சுட்டியுள்ளார் கவிஞர். குறிப்பாக, 'மேதையுள் மேதை; ஆய்வு வேந்தருள் வேந்தன்; ஈர்ப்புக் காதையின் முதல்வன்; எங்கள் காவியத் தலைவன் நியூட்டன்' (2: 458) என ஐசக் நியூட்டனுக்குக் கவிஞர் சூட்டியுள்ள புகழாரம் இலக்கியச் சுவை ததும்பி நிற்பதாகும். முத்தாய்ப்பாக,

*கலப்பையில் தொடங்கி இன்று*
*கணிப்பொறி, இணையம் என்ன*
*அளப்பரும் வெற்றி: போற்ற*
*ஆயிரம் கவிஞர் வேண்டும்* (2:377)

என நெஞ்சாரப் போற்றுகின்றார் குலோத்துங்கன்.

## வாழ்வியல் விழுமியங்கள்

ஆத்திசூடி, கொன்றை வேந்தன், நல்வழி முதலான நீதி நூல்களை நினைவூட்டும் வகையில் வாழ்வியல் விழுமியங்களைக் குலோத்துங்கன் தம் கவிதைகளில் ஆங்காங்கே இரத்தினச் சுருக்கமான மொழியில் எடுத்துரைத்துள்ளார். 'ஆள்வினை கண்ட ஆட்சி', 'மேழியின் மேன்மை', 'படைப்புப் பயணம்', 'மானுடம் பாட மகாகவி வேண்டும்', 'ஆற்றலின் ஊற்றுகள்', 'ஒருங்கிணைப்பது உயர்வின் பாதை!' 'ஓரடியால் புது உலகம் கண்டான்' என்றாற்போல் காப்பிய இயல்களுக்குக் கவிஞர் சூட்டியிருக்கும் தலைப்புக்கள் இவ் வகையில் குறிப்பிடத்தக்கவை. நெஞ்சை அள்ளும் அழகிய பொன்மொழிகளின் வடிவில் இப்பாகத்தில் ஆங்காங்கே சுடர்விட்டு நிற்கும் சில வாழ்வியல் விழுமியங்கள் வருமாறு:

*வாய்மையை எதிர்த்து நின்று*
*மனிதர்கள் வென்ற தில்லை* (2:146)

*தனிமனிதர் குருதியினில், வெயர்வு நீரில்*
*தழைக்கின்ற பயிரன்றோ தரணி தன்னில்*
*மனிதகுல முன்னேற்றம்* (2:171)

*உலகினில் இன்றும் கூட*
*உண்மை ஓர் அகதி: தேடி*
*உறவினர் வருவ தில்லை* (2:297)

*உடலொரு விந்தை: மாந்தன்*
*உள்ளம் ஓர் புதிரின் உச்சம்* (2:380)

*கேள்விகள் தானே கேட்டுக்*
*கேள்விக்குப் பதில்கள் காணும்*

*வேள்வியும் தானே செய்து*
*வெல்வது மனித சாதி* (2:468)

அறிவியலைத் தமிழில் பாடுவது கடினம். கருத்துச் செறிவோடு கவிதை நயங்களும் சேர இனிமையாகப் பாடி முழுவெற்றி கண்டிருக்கிறார் கவிஞர்... 'மானுட யாத்திரை' தமிழ்க் கவிதை உலகில் ஒரு மகத்தான சாதனை[10]

என்னும் தவத்திரு ஊரன் அடிகளின் மதிப்பீடு உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை.

**வையம் மேற்செலும்; மேலும் செல்லும்**

மண்ணிடை மனித சாதி வாழ்ந்த நீண்ட சரிதையை ஆராய்ந்து பார்த்தால் அதில் ஏற்றமும் இறக்கமும் நிறைந்திருக்கக் காணலாம்; மனித வாழ்வு தடைகளும் திருப்பு முனைகளும் தன்னகத்தே கொண்ட ஒரு புத்தகமாய் விளங்கக் காணலாம். இதனை,

*மண்ணிடை மனித சாதி*
*வாழ்ந்த நீள்சரிதை பேசின்*
*விண்ணிடை மிதந்த துண்டு*
*வீதியிற் புரண்ட துண்டு*

*சக்கரம் நகர்வ தேபோல்*
*சரிதையில் இறக்கம், ஏற்றம்*
*பக்கமும் நிறைந் திருக்கும்*
*பனுவலே மனித வாழ்வு* (2:174–175)

எனக் காப்பியத்தில் ஓர் இடத்தில் அழகுறப் பதிவு செய்துள்ளார் கவிஞர். எத்துணைதான் ஏற்றமும் இறக்கமும் நிறைந்ததாக இருந்தாலும் – எதிர்பாராத தடைகளையும் திருப்பு முனைகளையும் எதிர்கொண்டாலும் – மனித வாழ்வின் மீது தாம் வைத்திருக்கும் நம்பிக்கையைக் கவிஞர் குலோத்துங்கன் இழக்கவில்லை. 'மானுட யாத்திரை' இரண்டாம் பாகத்தின் முடிப்பு வரிகள் ஆழ்ந்திருக்கும் கவிஞரின் உள்ளத்தைத் திறந்து காட்ட வல்லவை.

*. . . . . . . . . நீண்ட*
*அறநெறி மரபை மாந்தர்*
*மிஞ்சுவர் இல்லை; வையம்*
*மேற்செலும்; மேலும் செல்லும்* (2:609)

'வையம் மேற்செலும்; மேலும் செல்லும்' என்னும் முத்தாய்ப்பான சொற்களில் வெளிப்படும் கவிஞரின் நம்பிக்கை அழுத்தமானது; ஆழமானது.

# பாகம் 3 : ஆன்மிகம், சமயம்

## நீண்ட கால இலக்கியப் பங்களிப்பு

'மானுடை யாத்திரை' என்ற தலைப்பில் ஒரு குறுங்காவியம் (Minor Epic) எழுத வேண்டும் என்ற முடிவில் தொடங்கினேன். அது பின்வரும் மூன்று பாகங்களாக முகிழ்த்திருக்கிறது:

பாகம் 1 : சமுதாயம், அரசியல் – 369 பாடல்கள்

பாகம் 2 : அறிவியல் – 609 பாடல்கள்

பாகம் 3 : ஆன்மிகம், சமயம் – 1145 பாடல்கள்[11]

என 'என்னுரை'யில் இக்காப்பியத் தோற்றம் குறித்துக் கூறுகிறார் குலோத்துங்கன். அவரது கூற்றின்படி, மூன்று பாகங்களும் சேர்ந்து 2123 பாடல்களைக் கொண்ட இப் படைப்பு ஒரு முழுமையான காப்பியமாக உருப்பெற்றிருக்கிறது. மூதறிஞர் கா.மீனாட்சிசுந்தரம் காப்பியத்திற்கு எழுதிய ஆய்வு முன்னுரையில் குறிப்பிடுவதுபோல்,

> அறிதலும் தேடலும் விடாமுயற்சியும் கொண்ட குலோத்துங்கன் தமிழ் மொழியில் என்றும் நிலைத்து நிற்கத்தக்க ஒரு காப்பியம் படைத் துள்ளார். இப் படைப்பு அவருடைய நீண்ட கால இலக்கியப் பங்களிப்பின் Magnum Opus என்று சொன்னால் மிகையாகாது... குலோத்துங்கனின் 'மானுட யாத்திரை' ஒரு கதைக் காப்பியம் அன்று. மொத்த மானுடத்தின் பரிணாம வளர்ச்சியின் மீதும் ஒளிபரப்பும் ஒரு கவிதைச் சுடர்.[12]

## சக்தி வணக்கம்

'மானுட யாத்திரை' காப்பியத்தின் முதல் பாகம் 'இயற்கை வணக்க'த்துடனும், இரண்டாம் பாகம் 'உண்மை வணக்க'த் துடனும் தொடங்கப் பெற்றிருக்க, மூன்றாம் பாகம் 'ஆன்மிகம், சமயம்' என்னும் தன் பாடுபொருளுக்கு ஏற்பச் 'சக்தி வணக்க'த் துடன் தொடங்கப் பெற்றிருப்பது மனங்கொளத்தக்கது.

*துரும்பினில், தூணில், யாங்கும்*
*சூழ்ந்துள பிரபஞ் சத்தில்,*
*அரும்பிடும் உயிரி னத்தில்*
*அனைத்திலும் இலங்கும் சக்தி*

*ஊமையாய் அமைந்த ஒன்றோ?*
*உள்ளம்ஒன்று அதற்கும் உண்டோ?*
*ஆமைபோல் ஐந்த டக்கி*
*அகத்துளே தேடு கின்றோம்* (3:9–10)

என்னும் ‘சக்தி வணக்க’ப் பாடலின் முடிப்பு பொருள் பொதிந்தது. துரும்பினில், தூணில், சூழ்ந்துள பிரபஞ்சம் எங்கும், உயிரினம் அனைத்திலும் இலங்கும் சக்தி (Supreme Power) ஒன்று; ஆமை போல் ஐந்தடக்கி, அகத்துளே தேடி ஒருவர் உணர வேண்டிய சக்தி இன்னொன்று என இரு வகைச் சக்தியையும் வணங்கித் தம் காப்பியத்தைத் தொடங்கியுள்ளார் குலோத்துங்கன்.

**கவிஞரின் பார்வையில் ஆன்மிகம்**

சமயம் (Religion) வேறு; ஆன்மிகம் (Spiritualisam) வேறு. சமயம் என்றால், எந்தச் சமயம் எனக் கேட்கலாம்; ஆன்மிகம் என்றால், எந்த ஆன்மிகம் என்று யாரும் கேட்பதில்லை. இன்னமும் குறிப்பாகக் கூறுவது என்றால், விவேகானந்த அடிகள் சமயவாதி அல்லர்; ஆன்மிகவாதியே. குலோத்துங்கன் இக் காப்பியத்தில் ஆன்மிகம் என்பதை இன்றைய வழக்கினின்றும் சற்று விரிவுபடுத்திய பொருளில் கையாண்டுள்ளார்.

> சமயங்களைப் போன்று ‘நம்பிக்கை’ எனும் அடிப்படையின் மேல் மட்டும் நிற்காது, தத்துவ ஆய்விற்கும் இடம் கொடுத்து அறிவியலார் பகுத்தறிவுவாதிகள் என்பவருடன் அமர்ந்து வாதிக்கும் பரிணாமமும் கொண்ட சிந்தனைப் பிரிவே ஆன்மிகம் என வரையறுப்பது பொருந்தும்[13]

என அவரே காப்பியத்திற்கு எழுதிய ‘என்னுரை’யில் தம் கருத்தினைப் பதிவு செய்துள்ளார்.

ஆன்மிகம் என்பதற்கு அகராதிகளும் கலைக்களஞ்சியங் களும் தரும் சொற்பொருளுக்கு அப்பால், இன்னும் ஒரு படி மேலே சென்று,

> சமுதாய நலன் எனும் விழுமியத்தை, தன்னலத்தைத் துறந்தும் சமுதாய நலன் கருதும் உணர்வைக் குறிப்பிட, ஒரு சொல் வேண்டும். அதைத் தனி மனித அளவில் ‘மெய்யறிவு’ என்கிறோம். அதையே ஒரு சமுதாயத்தின் தத்துவமாக்கும் பொழுது ஆன்மிகம் எனலாம்[14]

என்ற கருத்தியலைக் குலோத்துங்கன் இந்தக் காப்பியத்தின் வாயிலாக முன்மொழிந்துள்ளார். அவரது நோக்கில், சமுதாய நலனுக்கு முக்கியமான, உயிர் போன்ற அணுகுமுறை, தத்துவச் சிந்தனை 'ஆன்மிகச் சிந்தனை' ஆகும்.

*அறவழி வாழ்வு தேடும்*
*அனைத்தும் ஆன்மிகம்* (3: 1125)

என 'மானுட யாத்திரை', அறநெறி மரபு சார்ந்த மெய்யறிவுத் தத்துவமே ஆன்மிகம் என இரத்தினச் சுருக்கமான வரைவிலக்கணத்தினை வகுக்கின்றது.

**வள்ளுவர் வகுத்துத் தந்திருக்கும் புதிய பாதை**

'குலோத்துங்கன்' என்ற புனைபெயரில் கவிதை படைத்து வரும் பேராசிரியர் வா.செ.குழந்தைசாமிக்கு 1988-ஆம் ஆண்டிற்கான சாகித்திய அகாதெமி விருதினைப் பெற்றுத் தந்த நூல் 'வாழும் வள்ளுவம்' (1987). இது இனிய தமிழில் திருக்குறளுக்கு அறிவியல் பார்வையில் எழுந்த ஒரு விளக்க நூல். திருக்குறள் காலத்தை வென்று நிலைபெற்று நிற்பதற்கான கூறுபாடுகளுள் குறிப்பிடத்தக்கவை எனப் பேராசிரியர் வா.செ.குழந்தைசாமி கருதுபவை ஐந்து. அவையாவன:

1. மெய்யறிவுச் சார்புடைமை
2. பொதுமை நோக்கு
3. அறிவியல் அணுகுமுறை
4. மனித முயற்சியின் மாண்பு போற்றல்
5. இலக்கியல் இணைந்த இயல்பியல் காணல்[15]

இக் கூறுபாடுகளை அறிவியல் நோக்கில் அலசி ஆராயும் நூலே 'வாழும் வள்ளுவம்'.

உரைநடை வடிவில் 'வாழும் வள்ளுவம்' என்னும் நூலின் வாயிலாகத் திருக்குறளின் புதிய பரிமாணத்தை வெளிப்படுத்திய வா.செ.குழந்தைசாமி (குலோத்துங்கன்), 'மானுட யாத்திரை' காப்பியத்தின் மூலம் கவிதை வடிவில் திருக்குறளின் தனித்தன்மையைப் புலப்படுத்தியுள்ளார்; 'ஒழுக்கத்தின் உயர்வு பேசும் உன்னதப் பனுவல்' (2:311) என்றும், 'வள்ளுவம் மானிடத்தின் மாபெரும் வாழ்வியல் நூல்' (2:321) என்றும் திருக்குறளைப் போற்றியுள்ளார்: 'எல்லா நூல்களிலும் நல்லன எடுத்து எல்லார்க்கும் பொதுப்படக் கூறுதல் இவர்க்கு இயல்பு' (திருக்குறள் 322 உரை)

எனத் திருவள்ளுவரைக் குறித்துப் பரிமேலழகர் உரைத்த மதிப்பீட்டினை அடியொற்றி,

*அலகிலா வேறு பாட்டின்*
*ஆழத்தின் ஆழம் மூழ்கி*
*உலகெலாம் ஏற்கத் தக்க*
*ஒருமையின் ஊற்றுக் கண்டோன்* (3: 294)

எனத் திருவள்ளுவருக்குப் புகழாரம் சூட்டியுள்ளார்.

கவிஞர் குலோத்துங்கனின் நோக்கில் திருவள்ளுவர், ஐயத்திற்கு இடமின்றி மாபெரும் புரட்சியாளர் ஆவார்.

> நீண்ட காலத் தத்துவ மரபில் திருக்குறள் போன்று உடல் உழைப்பை உயர்த்திப் பிடிக்கும் இன்னொரு நூலை எண்ணிப் பார்க்கவும் இயலவில்லை. உழைப்பின் உயர்வு (Dignity of Labour) பேசும் ஒப்பற்ற வேதம் குறள்[16]

என்பது கவிஞரின் முடிந்த முடிபு.

*உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்; மற்றுஎல்லாம்*
*தொழுதுண்டு பின்செல் பவர்* (1033)

என்னும் குறட்பா போதும் இக் கருத்தினை நிலைநாட்ட. உழவுத் தொழிலுக்கு – உடல் உழைப்பாளர்களுக்கு – வள்ளுவர் தந்திருக்கும் ஏற்றம் மலையினும் மாணப் பெரிதாகும்.

*பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்* (972)

*எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்*
*மெய்ப்பொருள் காண்பது அறிவு* (423)

*எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்*
*மெய்ப்பொருள் காண்பது அறிவு* (355)

என்னும் குறட்பாக்கள் வாயிலாக இந்தியத் தத்துவ வரலாற்றில் திருவள்ளுவர் அறிமுகப்படுத்தி இருக்கும் பார்வை – வகுத்துத் தந்திருக்கும் பாதை – புதுவதாகும். இதனைத் திட்பமும் நுட்பமும் ஒட்பமும் விளங்க எடுத்துக்காட்டியுள்ளார் குலோத்துங்கன்.

**சித்தர்கள் எனும் புரட்சியாளர்**

தமிழ்ச் சிந்தனை மரபில் – தத்துவ நோக்கில் – சித்தர்களுக்குச் சிறப்பான ஓர் இடம் உண்டு. ‘உடல் வளர்த்து, உயிர்

வளர்க்கும் தத்துவம் கண்ட சித்தர்கள்' என்னும் இக் காப்பியத்தின் இருபத்து மூன்றாம் இயலில் குலோத்துங்கன் இதனை நன்கு தெளிவுபடுத்தியுள்ளார். 'கடவுளைக் காண முயல்கின்றவர்கள் பக்தர்கள்; கண்டு தெளிந்தவர்கள் சித்தர்கள்' எனப் பக்தர்களுக்கும் சித்தர்களுக்கும் இடையே காணலாகும் நுண்ணிய வேறுபாட்டினைத் தெளிவுபடுத்துவார் மூதறிஞர் தெ.பொ.மீனாட்சிசுந்தரனார் (கலைக்களஞ்சியம்: தொகுதி 4, ப.643). பேராசிரியர் க.கைலாசபதி 'சித்தர் தத்துவம்' என்னும் தலைப்பில் ஒப்பியல் நோக்கில் எழுதிய கட்டுரையில் சித்தர்களைக் கிளர்ச்சியாளர் (Rebels) எனக் குறிப்பிடுவார் (ஒப்பியல் இலக்கியம், ப.189). இச் சான்றோர்களை அடியொற்றிக் குலோத்துங்கனும் 'ஆன்மிகத்தில் திருந்திய பாதை கண்டோர்' என்றும், 'உறைந்துள பழமை யாவும், உலுக்கிய புரட்சியாளர்' என்றும், 'சாத்திரம் சடங்கு யாவும், தவிர்த்தவர்; தாண்டி நின்றோர்' என்றும், 'சித்தி கண்ட சாதனையாளர்' என்றும், 'வாழும் தரணியில் துறக்கம் (சுவர்க்கம்) கண்டோர்' என்றும், 'தரணியில் மாந்தர் எல்லாம், இன்புற்று வாழ்க வென்ன, இறைஞ்சிய மனித நேயர்' என்றும் சித்தர்களை நன்கு அடையாளம் காட்டியுள்ளார்.

*இருள், ஒளி இரண்டும் சேர்ந்த*
*இலக்கிய மரபு: சித்தர்*
*பொருளினைப் புரிந்து கொள்ளப்*
*போதிய பயிற்சி தேவை* (23:525)

என அறிவுறுத்தும் குலோத்துங்கன்,

*உடல் நம(து) ஊடகம்: பேர்*
*உண்மையின் கோயில்: மெய்யைத்*
*திடமுடன் பாது காத்துச்*
*'சித்தியை'த் தேட வேண்டும்'* (3:589)

என 'உடல் வளர்த்து, உயிர் வளர்க்கும் தத்துவம் கண்டவர்கள் சித்தர்கள்' என்னும் உண்மையினை அழுத்தமாக உணர்த்தவும் தவறவில்லை.

## இமாலய முயற்சிக்குக் கிடைத்த வெற்றி

உச்சி மேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் சமண சமயக் காப்பியமான சீவக சிந்தாமணிக்கு உரை எழுதிய போது அச் சமயத்தைச் சார்ந்த சான்றோர் பெருமக்கள் அதனை உடனடியாக ஏற்றுக் கொள்ளவில்லை; இந்நிலையில் நச்சினார்க்கினியர் சமண

சமயக் கொள்கைகளையும் கோட்பாடுகளையும் நன்கு கற்றுத் தெளிந்து உள்வாங்கிக் கொண்டு இரண்டாம் முறையாகச் சீவக சிந்தாமணிக்கு உரை வரைந்தபோது அதனைச் சமண சமயத்தைச் சார்ந்த சான்றோர் பெருமக்கள் முழுமனத்துடன் ஏற்றுக்கொண்டார் களாம். இதுபோல், குலோத்துங்கனும் உலகின் பல்சமயக் கொள்கை களையும் கோட்பாடுகளையும் கசடறக் கற்றுத் தெளிவதற்கு அரும்பாடுபட்டுள்ளார்; அறிஞர்கள் பலரையும் அணுகி – அவர்களுடன் அளவளாவி – அவர்களிடம் உசாவி அறிந்து கொண்டுள்ளார். இதனை அவரே,

> இந் நூலை எழுதுவதற்கு நான் தொகுத்த தகவல்களில் தெளிவு பெறவும், பல கேள்விகட்குப் பதில் காணவும் நண்பர்கள் பலருடன் உரையாடினேன். விவாதித்தேன். அனைவரும் முழுமனத்துடன் உதவினர்[17]

எனக் காப்பியத்திற்கு எழுதிய ‘என்னுரை’யில் நெஞ்சார்ந்த நன்றியறிதலுடன் நினைவுகூர்ந்துள்ளார். உலகின் பல்வகைச் சமயங்களையும் அவற்றின் அடிப்படை உண்மைகளையும் ஆன்மிகப் பின்னணிகளையும் தத்துவ அடிப்படைகளையும் எளிய நிலையினரும் படித்துப் புரிந்து கொள்ளும் வண்ணம், எல்லோரும் படிக்கத் தூண்டும் ஈர்ப்புத் திறனைத் தன்னகத்தே கொண்ட ஒரு முழுமையான காப்பியத்தினைப் படைக்கும் முயற்சியில் குலோத்துங்கன் குறிப்பிடத்தக்க வெற்றியைப் பெற்றுள்ளார். ஆன்றவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோர்களின் கணிப்பில் இது,

> *இமயம் எனத் தக்க முயற்சி; அதன் சிகரம் எனத் தக்க வெற்றி*[18]

ஆகும்.

> *கண்களில் காணத் தக்க*
> *காட்சியை யன்றி வேறோர்*
> *உண்மையிங் (கு) இல்லை என்ப(து)*
> *உலகாய தத்தின் கொள்கை* (3: 158)

என உலகாயதத்தின் உயிர்க் கொள்கையை உணர்த்தும் போதும்,

> *அன்புடன் அகிம்சை, யோகம்*
> *அறவழி: எவ்வு யிர்க்கும்*
> *துன்புசெய் யாமை: வாழ்வில்*
> *துறவுநற் சமணர் கொள்கை* (3: 214)

எனச் சமண சமயத்தின் அடிப்படைக் கொள்கையை அறிவுறுத்தும் போதும்,

*கூட்டியும் கழித்தும் பார்க்கின்*
*குவலயத் துயரம் நீக்கும்*
*தேட்டமே பௌத்தம்: புத்தர்*
*தேடிய வீடும் அஃதே* (3:287)

எனப் பௌத்த சமயத்தினரின் சித்தாந்தத்தினை உரைக்கும் போதும்,

*'நரகம் நீ செல்வாய்' என்றார்*
*நம்பி; கை கூப்பிச் சொன்னான்:*
*'பரகதி பல்லோர் காணப்*
*பாவம்நான் ஒருவன் ஏற்றேன்'* (3:455)

என்னும் 'ஆன்மிகத் துறவிகட்குள் அதிசய மனித'ரான இராமானுசரின் மந்திர மொழியைச் சொல்லில் வடிக்கும் போதும்,

*பாதைகள் பலவா னாலும்*
*பயன்எனல் ஒன்றே என்னும்*
*மேதைமை இந்து தர்ம*
*விழுமியச் சிகரம் என்போம்* (3:530)

என இந்து சமயத்தின் தனித்தன்மையைப் பறைசாற்றும் போதும்,

*சீனமண்: தொன்மை வாய்ந்த*
*சிந்தனை மரபு கண்ட*
*ஞானமண்: தத்து வத்தின்*
*நாயகர் வாழ்ந்த பூமி* (3:596)

எனச் சீன மண்ணின் செவ்வியைச் செப்பும் போதும்,

*தேர்ந்தனர் பன்னி ரண்டு*
*சீடர்கள்: கர்த்தர் தாமே*
*ஓர்ந்ததில் ஒன்று பாளை*
*உம்பர்க்கும் தவ(று) இயற்கை* (3:803)

என ஏசு பெருமானின் கணிப்பிலேயே தவறு நேர்ந்ததைச் சுட்டிக்காட்டும் போதும் குலோத்துங்கனின் மொழி ஆளுமையில் – பயன்பாட்டில் – அருமையும் எளிமையும் அழகும் ஆழமும் கொலு வீற்றிருக்கக் காண்கிறோம். சாத்தனார் மணிமேகலையில் படைத்திருக்கும் 'சமயக் கணக்கர் தம் திறம் கேட்ட காதை' (27) சங்கச் சான்றோர் ஔவையாரின் மொழியில் குறிப்பிடுவது என்றால் 'வைகல் எண்தேர் செய்யும் தச்சன், திங்கள் வலித்த கால்' (புறநானூறு, 87) அன்னது; கவிஞர் குலோத்துங்கன் தம் 'மானுட யாத்திரை' காப்பியப் படைப்பாக்கத்தின் போது எடுத்துக்

கொண்டுள்ள முயற்சியும் முனைப்பும் இவ் வகையில் சரிநிகர் சமானமாகக் கருதத் தக்கனவே ஆகும்.

**உடன்பாட்டுச் சிந்தனையும் உயரிய நோக்கும்**

தமிழ் இலக்கியம் வழிவழியாக மனித குலத்திற்கு நம்பிக்கை ஊட்டுவதையே தன் தலையாய நோக்கமாகக் கொண்டது; 'உள்ளுவதெல்லாம் உயர்வு உள்ளுக' என வலியுறுத்தி வருவது. இவ்வகையில் சங்கச் சான்றோர் முதல் பாரதியார் உள்ளிட்ட இருபதாம் நூற்றாண்டுக் கவிஞர்கள் வரை யாவரும் உடன்பாட்டுச் சிந்தனையாளர் ஆவர்; ஒருமித்த கருத்தினர் ஆவர்.

*இன்னாது அம்ம இவ்வுலகம்*
*இனிய காண்கஇதன் இயல்பு உணர்ந்தோரே*(புறநானூறு, 194)

என்பது சங்கச் சான்றோர் பக்குடுக்கை நன்கணியார் உணர்த்தும் வாழ்க்கை நெறி.

*வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்*
*தெய்வத்துள் வைக்கப் படும்* (50)

என்பது வான்புகழ் வள்ளுவரின் உடன்பாட்டுச் சிந்தனை.

*மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்*
*எண்ணில் நல்ல கதிக்கு யாதும்ஓர் குறைவிலை*

என்பது 'குழந்தை ஞானி' திருஞானசம்பந்தரின் ஊக்க மொழி.

"நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம், நரகத்தில் இடர்ப்படோம்..... ஏமாப்போம், பிணியறியோம், இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை" என்பது அப்பர் சுவாமிகளின் எழுச்சிக் குரல். மேலும் அவர், "மனித்தப் பிறவியும் வேண்டுவதே இம் மாநிலத்தே" எனப் பறைசாற்றுவார்.

ஒன்று பரம்பொருள், நாம் அதன் மக்கள்,
உலகு இன்பக் கேணி[19]

என்பது பாட்டுக்கொரு புலவர் பாரதியாரின் கொள்கை முழக்கம்.

*பத்தாவது தடவையாக விழுந்தவனுக்கு*
*முத்தமிட்டுச் சொன்னது பூமி*
*ஒன்பது முறை எழுந்தவனல்லவா நீ?*[20]

என்பது இருபதாம் நூற்றாண்டுக் கவிஞர் ஈரோடு தமிழன்பனின் ஹைகூ. இங்ஙனம் நம்பிக்கை ஊட்டுவதையும் உயர்வாக

உள்ளுமாறு வலியுறுத்துவதையுமே தாரக மந்திரமாகக் கொண்டு செயலாற்றி வரும் கவிஞர்களின் வரிசையில் குலோத்துங்கனும் சேருகிறார். 'மானுட யாத்திரை' காப்பியத்தில் மூன்றாம் பாகத்தின் இறுதியில் 'தீராத தேடல்', 'தொடரும் பயணம். . .' என்னும் தலைப்புக்களில் இடம்பெற்றிருக்கும் இரு இயல்களும் இவ் வகையில் சிறப்பாக நினைவுகூரத் தக்கவை. கவிஞரே குறிப்பிடுவது போல், 'அனைத்தையும் கழித்துக் கூட்டி, அனுபவத் தொடு பகிர்ந்து, நினைத்திடின்' புலனாகும் உண்மை ஒன்று உண்டு. அது வருமாறு:

*நேற்றினும் இன்று நன்று*
*நிகழ்வதின் நாளை நன்று*
*மாற்றிதற்(கு) இல்லை; நாளும்*
*வளர்வது மனித சாதி.* (3: 1088)

'ஆசறு நல்ல நல்ல, அவை நல்ல நல்ல அடியார் அவர்க்கு மிகவே' என்னும் திருஞானசம்பந்தரின் வாக்கினை நினைவூட்டும் வண்ணம், 'நேற்றினும் இன்று நன்று – நிகழ்வதின் நாளை நன்று' என நம்பிக்கையுடன் முழங்குகின்றார் குலோத்துங்கன்.

**கவிதை நயம் களிநடம் புரிந்து நிற்கும் இடங்கள்**

கொன்றை வேந்தனைப் போல் ஓர் அடியில் அல்லது இரத்தினச் சுருக்கமான இரு அடிகளில் கருத்தினை நெஞ்சில் பதியும் வண்ணம் புலப்படுத்தும் கலையில் குலோத்துங்கன் வல்லவராக விளங்குகின்றார். பதச் சோறாகச் சில கருத்து மின்னல்கள்:

*"மனிதரை மிஞ்சி நிற்கும் வாழ்விலை"* (3:1138)
*"மதிநலம் இயற்கைச் செல்வம்"* (3:405)
*"மெய்யலால் கோவில் இல்லை"* (3:401)
*"அறிவுளோர் அனைத்தும் உள்ளோர்"* (3:643)
*"ஆசைபோல் பசியொன் றில்லை"* (3:839)
*"ஆணும் பெண்ணும், ஏகத்தின் இருசெம் பாதி"* (3:487)
*"வாய்த்துள தன்னம்பிக்கை வாழ்வினில் வைரம்"* (3:44)
*"ஆற்றலின் அமர ஊற்றாம் பெண்"* (3:1109)
*"அச்சம் நின் றுலவும் நெஞ்சில்*
*ஆளுமை செழித்தல் இல்லை"* (3:45)

*"உண்மையின் உயர்ந்த தென்ன*
*ஒருபொருள் இல்லை"* (3:620)

*'சுருக்கமே அறிவின் ஆன்மா'* (Brevity is the soul of wit)

என்பதற்குக் கட்டியம் கூறி நிற்கும் இடங்கள் இவை!

*'ஓர் வெள்ளியின் வட்டில் அன்ன தேனில(வு)'* (3:13)

– கவிஞரின் உவமைத் திறனைப் பறைசாற்றி நிற்கும் அடி இது!

உலக வாழ்வின் துயரினைப் போக்கத் துறவு மேற்கொண்ட சித்தார்த்தனைப் பற்றிக் குறிப்பிடும்போது,

*தரணிஓர் சொர்க்கம் காணத்*
*தன் சொர்க்கம் துறந்து சென்றான்* (3:242)

எனக் கவிஞர் பாடியிருப்பது கவித்துவத்தின் மணி மகுடம் ஆகும்.

*காலத்தின் முடிவு கண்டு*
*கலங்கிடா நெஞ்ச மில்லை*
*ஞாலத்தைப் பிரியும் நேரம்*
*ஞானியும் கண்ணீர் விட்டான்* (3:678)

சீன மண் தந்த ஞானி கன்பூஃசியசின் இறுதி நாள்களைப் பற்றிய கவிஞரின் இப் படப்பிடிப்பு பயில்வார் உள்ளத்தை உருக்குவதாகும்.

**ஆன்மிக இதயம் தேவை**

'மானுட யாத்திரை' என்பதற்கு ஏற்பத் 'தொடரும் பயணம்' என்னும் முப்பத்தைந்தாம் இயலுடன் காப்பியம் நிறைவு பெறுகின்றது. அதில்,

*அறிவியல் படகில் வாழ்க்கை ஆற்றினைக் கடக்க,*
*ஆன்ம நெறியெனும் துடுப்புத் தேவை*[21]

என அறிவுறுத்துகின்றார் குலோத்துங்கன். மேலும்,

*அறிவியல் வழியில் யாவும்*
*ஆய்ந்தொரு முடிவு காணும்*
*அறிவியல் உலகத் திற்கும்*
*ஆன்மிக இதயம் தேவை* (3:1121)

என்பது கவிஞரின் கணிப்பு ஆகும்.

கவிஞர் குலோத்துங்கனுக்கு ஆன்மாவின் உண்மை, இன்மை என ஆய்பவர் குறித்துக் கவலை இல்லை; மேலும்

வான்வீடு தேடும் பக்தர் வழியிலும் அவர் தலையிட மாட்டார். அவரைப் பொறுத்த வரையில்,

*வையகம் நமது சொத்து*
*வாழ்வொரு பே(று): இரண்டும்*
*வையத்(து) உள்ள வாரும்*
*கண்களில் காண்ப வா தும்* (3:1127)

வையத்து உள்ளது – கண்களில் காணக் கூடியது: எனவே, கவிஞரின் கருத்து யாவரும் ஏற்கத் தக்கதே ஆகும்.

**விண்ணகம் இங்குக் காண்போம்!**

நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரக் காப்பியத்தில் வஞ்சிக் காண்டத்தின் முடிவில், "பரிவும் இடுக்கணும் பாங்குற நீங்குமின்" (வரம் தரு காதை: 186 – 202) எனத் தொடங்கி நிலைபேறு உடைய வாழ்வியல் விழுமியங்களை அடுக்கி மொழிவார் இளங்கோவடிகள். இதே போல் குலோத்துங்கனும் தம் காப்பியத்தின் முடிவில் நிலையான வாழ்வியல் விழுமியங்களை (Eternal Values) நிரந்தினிது கூறுகின்றார்:

*மனிதநே யத்தை மிஞ்சும்*
*மதமிலை: ஒழுக்கம் என்னும்*
*புனிதத்தில் இடம் பெறாத*
*பொருளிலை: இயற்கை தந்த*
*வய்யம் ஓர் இன்ப வீடு:*
*வாழ்வொரு வரம் என்கின்ற*
*மெய்ம்மையே எமது வேதம்*
*விண்ணகம் இங்குக் காண்போம்* (3:1140)

மனித நேயம் (Humanism) என்னும் மதம் – ஒழுக்கம் என்னும் புனிதம் – இயற்கை தந்த வய்யம் என்னும் இன்ப (Bliss) வீடு – வாழ்வு என்னும் வரம் – இவை நான்கும் வசப்பட்டால்,

"விண்ணகம் இங்குக் காண்போம்![22]

இது உறுதி; முக்காலும் உண்மை.

## குறிப்புகள்

1. அணிந்துரை, மானுட யாத்திரை, பாகம் 1: சமுதாயம், அரசியல், p. xxvi.
2. மேலது, முன்னுரை, ப.13.
3. மேலது, அணிந்துரை, இந்திரா பார்த்தசாரதி, ப.14.

4. வாயில் திறக்கட்டும், ப.34.
5. மானுட யாத்திரை, பாகம் 1, முன்னுரை, ப.10.
6. மேலது.
7. மேலது, ப.12.
8. தொல்காப்பியம் : பொருளதிகாரம், பேராசிரியம், ப.68.
9. மானுட யாத்திரை, பாகம் 2: அறிவியல், 235.
10. அணிந்துரை, தவத்திரு ஊரன் அடிகள், pp. xiii - xiv.
11. மானுட யாத்திரை, பாகம் 3, என்னுரை, ப. lxi - lxii.
12. மேலது, கா. மீனாட்சி சுந்தரம், முன்னுரை, p.xliii.
13. மேலது, என்னுரை, p. lxii - lxiii.
14. மேலது, என்னுரை, p.lxxxii.
15. வாழும் வள்ளுவம், ப.31.
16. என்னுரை, p.lxxiii.
17. மேலது, ப. lxxxix.
18. மானுட யாத்திரை, ப.xl.
19. பாரதியார் கவிதைகள், ப.142.
20. சூரியப் பிறை, ப.30.
21. மானுட யாத்திரை. ப.221.
22. மேலது, ப.331.

# 8. அணிந்துரைகள் வெளிப்படுத்தும் ஆளுமைப் பண்புகள்

> முன்னுரை அல்லது அணிந்துரை, அடிப்படையில் இரண்டு வகையாக அமையலாம். மேலெழுந்த வாரியாகப் படித்துவிட்டு ஓரிரு பக்கங்களில் எழுதப்படும் அணிந்துரை; முழுமையாகப் படித்து விட்டு, விரிவாக எழுதப்பட்டும் அணிந்துரை. என்னைப் பொறுத்தவரை, அணிந்துரை இரண்டாவதாகக் குறிப்பிடப்பட்டிருப்பது போல் அமைய வேண்டும் என்பதுதான். அணிந்துரை ஏறத்தாழ ஒரு நூலுக்கு அறிமுகவுரையாக அமைய வேண்டும்.
>
> —குலோத்துங்கன்[1]

'எனது பார்வையில்....' (2009) என்னும் நூல், பேராசிரியர் வா.செ.குழந்தைசாமி இருபத்து இரண்டு நூல்களுக்கு அவ்வப் போது எழுதிய அணிந்துரைகளின் தொகுப்பு ஆகும். அவர் கவிதை, நாடகம், காப்பியம், இலக்கியத் திறனாய்வு, வாழ்க்கை வரலாறு, கட்டுரை, கல்வி, சமயம், தொழில் நுட்பம், நிர்வாகம், மேலாண்மை, அகராதியியல், மொழியியல் முதலான பல்வேறு துறைகளைச் சார்ந்த நூல்களுக்கு அணிந்துரை தந்திருப்பது இங்கே கருத்தில் கொள்ளத்தக்கதாகும்.

## அணிந்துரை பெறுவதில் ஆர்வமும் ஈடுபாடும்

பேராசிரியர் வா.செ.கு. தம் நூல்களுக்குத் தக்க அறிஞர்களிடம் இருந்து அணிந்துரைகள் பெறுவதில் மிகுந்த ஆர்வமும் ஈடுபாடும் காட்டியுள்ளார். இவ்வகையில் 'பாரத ரத்னா' சி.சுப்பிரமணியம், தவத்திரு குன்றக்குடி அடிகளார், சிலம்புச் செல்வர் ம.பொ.சிவஞானம், கலாநிதி க.கைலாசபதி, மூதறிஞர் அ.ச.ஞானசம்பந்தன், ம.ப.பெரியசாமித் தூரன் முதலான இருபதுக்கு மேற்பட்ட அறிஞர்களிடம் இருந்து வா.செ.கு. தம் பல்வேறு நூல்களுக்கு அணிந்துரைகள் பெற்றுள்ளார். குறிப்பாக, யாழ்ப்பாணப் பல்கலைக் கழகப் பேராசிரியர் கார்த்திகேசு சிவத்தம்பி 'குலோத்துங்கன் கவிதைகள்' என்னும் முழுத்தொகை நூலுக்கு 30 பக்க அளவில் ஆய்வு நோக்கில் நீண்ட அணிந்துரை நல்கியுள்ளார்.

> இந்நூலுக்கு அணிந்துரை பெற வேண்டுமென நான் எண்ணிய பொழுது உடனடியாக என் நினைவில் நின்றவர் பேரா. சோ.ந.கந்தசாமி அவர்கள்தான். முதுபெரும் தமிழறிஞர்; மேலைநாட்டு அறிவுலகத்தோடு நெருக்கமான தொடர்புடையவர். தமிழ் இலக்கிய அறிவும், தத்துவப் பயிற்சியும் இணையப் பெற்றவர்[2]

என்னும் வா.செ.கு.வின் கூற்று, தம் நூலுக்குத் தக்கவரிடம் இருந்து அணிந்துரை பெறுவதில் அவர் எவ்வளவு கண்ணும் கருத்துமாக இருக்கிறார் என்பதைப் புலப்படுத்துவதாகும். இதே போல, மற்றவரது நூல்களுக்கு வா.செ.கு. மிகுந்த பொறுப்போடும் திறனாய்வுப் பார்வையோடும் அணிந்துரைகள் எழுதியுள்ளார்.

## நூலின் அழகு அணிந்துரையில்

ஒரு நூலுக்கு அணிந்துரை என்பது மனிதனுக்கு முகம் போன்றது; கோட்டைக்கு வாயிலைப் போன்றது. அகத்தின் அழகு முகத்தில் தெரிவது போல், ஒரு நூலின் அழகு அதன் அணிந்துரையில் தெரியும். கோட்டையின் வலிமையும் வனப்பும் அதன் தோரண வாயிலில் வெளிப்பட்டு நிற்பது போல், ஒரு நூலின் எழிலும் ஏற்றமும் அதன் அணிந்துரையில் வெளிப்பட்டு நிற்கும். இவ் வகையில் பேராசிரியர் வா.செ.கு. பல்வேறு நூல்களுக்கு நல்கி இருக்கும் அணிந்துரைகள் அந் நூல்களைச் செவ்விய முறையில் வாசகர்களுக்கு அறிமுகப்படுத்துகின்றன; அவரது ஆளுமைப் பண்புகளையும் அடையாளம் காட்டி நிற்கின்றன.

> *குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்*
> *மிகைநாடி மிக்க கொளல்* (504)

எனத் 'தெரிந்து தெளிதல்' அதிகாரத்தில் வள்ளுவர் கூறும் கருத்து, இலக்கியத் திறனாய்வுக்கும் பொருந்தி வருவதே ஆகும். ஆய்வாக இருந்தாலும் சரி, திறனாய்வாக மேற்கொண்டாலும் சரி, தனிமனிதனைப் பற்றிய மதிப்பீடு ஆனாலும் சரி, முதலில் காண வேண்டியது குணம்; பிறகு குற்றம்; அடுத்தது இரண்டில் மிகுதி எது என்று பார்ப்பது; முடிவாக அவற்றுள் மிகுதியைக் கொண்டு தெளிவது. 'மிகை நாடி மிக்க கொளல்' என வள்ளுவர் வகுத்துரைக்கும் இவ் வரைவிலக்கணத்தைப் பேராசிரியர் வா.செ.கு. தம் அணிந்துரைகளில் நன்கு பின்பற்றியுள்ளார்.

> இந்நூல் வள்ளுவர் பற்றிய சில புதிய சிந்தனைகளைத் துவக்கி வைக்கிறது. ஆசிரியர் பலமுறை மேற்கோள் காட்டும் 'வாழும் வள்ளுவம்'

> என்ற நூலில் இடம்பெற்றுள்ள கருத்துக்களையும் வாதங்களையும் உள்வாங்கி, அந்த நூல் விட்ட இடத்திலிருந்து நீண்ட தூரம் முழுவதும் புதியதான ஒரு தடத்தை அமைத்துக் கொண்டு புலவர் வீரமணி அவர்கள் மேற்சென்றிருக்கிறார். இது ஒரு வெற்றிப் பயணம் என்பது மிகையன்று

எனப் புலவர் ப.வீரமணியின் 'வள்ளுவரும் இயங்கியல் தத்துவ ஞானக் கூறுகளும்' என்னும் திறனாய்வு நூலுக்கு எழுதிய அணிந்துரையில் வா.செ.கு. குறிப்பிட்டிருக்கும் கருத்து இங்கே மனங்கொளத் தக்கதாகும்.

## முறையான திட்டமிடலும் தொலைநோக்குப் பார்வையும்

பேராசிரியர் வா.செ.கு.வைப் பொறுத்தவரையில் எதையும் ஒப்புக்குச் செய்வது என்பது மருந்துக்குக்கூடக் கிடையாது; நன்கு திட்டமிட்டு, தொலைநோக்குப் பார்வையோடு, செய்வன திருந்தச் செய்வதே வா.செ.கு.வின் வழக்கம்; வாடிக்கை; அவரது ஆளுமைப் பண்பு என்று கூடச் சொல்லலாம். அவரது அணிந்துரைகளும் இதற்கு விதிவிலக்கு அல்ல. ஒரு நூலுக்கு அணிந்துரை எழுத ஒப்புக்கொள்வதற்கு முன்பே தமக்கு அதற்குத் தகுதி இருக்கிறதா என்று பார்ப்பதும், ஒப்புக் கொண்ட பிறகு நூலினை முழுவதும் படித்துப் பார்த்து, அறிவியல் கண்ணோட்டத்துடனும் நடுவுநிலைமையோடும் அந் நூலுக்கு அணிந்துரை எழுதுவதும் வா.செ.கு.வின் தனித்தன்மை ஆகும். பதச் சோறாக,

> செந்தமிழ்ச்செல்வன் எனும் இனிய பெயரை ஏற்றிருக்கும் நண்பர் திரு.நூ.பாதர்சமால் அவர்கள், தாம் எழுதியுள்ள 'அருள் அதிகாரம்' எனும் பெருங்காப்பியத்திற்கு முன்னுரை எழுத வேண்டும் எனக் கேட்ட பொழுது நான் உண்மையிலேயே மிகவும் தயங்கினேன்... இலக்கிய, இலக்கணப் புலமையில் சிறந்த, நாடறிந்த தமிழ் அறிஞர் ஒருவரை அவர் நாடியிருக்கலாமே என எண்ணினேன். அவர் இப்படைப்புக்கு எடுத்திருக்கும் முயற்சி, பயன்படுத்திய காலம், இந்நூலில் இடம்பெற்றிருக்கும் பெருமைக்குத் (பொருளுக்குத்) தேவையான, இலக்கியம் சார்ந்த, தத்துவம் சார்ந்த, அறிவியல் சார்ந்த உண்மைகளைச் சேகரிக்க அவர் படித்திருக்கக் கூடிய நூல்கள், அவரது நெடுநாள் உழைப்பு ஆகியன பற்றி எண்ணும் பொழுது, இத்தகைய ஒரு தமிழ் மகனை

> ஊக்குவிப்பதற்கும் மேலான கடமை ஒன்று இல்லை என்ற எண்ணமே என் நெஞ்சில் மேலிட்டது. இந்நூலுக்கு முன்னுரை எழுத நான் துணிந்தது, என் கல்வித் தகுதி பற்றிய தன்று; கடமையுணர்வின்பால்பட்டதேயாகும்

எனத் தன்னடக்கத்தோடு வா.செ.கு. ஓர் அணிந்துரையின் தொடக்கத்தில் எழுதியிருக்கும் பகுதியை இங்கே சுட்டிக்காட்டலாம். இங்ஙனம் குறிப்பிட்டிருக்கும் அவர், பதினேழு பக்க அளவில் விரிவாக அக் காப்பியத்தின் பல்வகைத் திறன்களும் விளங்க அணிந்துரை தந்திருப்பதும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும்.

முனைவர் மு.தமிழ்க்குடிமகனின் 'பத்தாண்டுத் தமிழ்க் கவிதைகள்' என்னும் ஆய்வு நூலுக்கு எழுதிய அணிந்துரையிலும் பேராசிரியர் வா.செ.கு. அறிவியல் பார்வையின் அருமையினையும் இன்றியமையாமையையும் வலியுறுத்தியுள்ளார்.

> ஓர் ஆய்வின் முடிவில் உருவாகும் உண்மை, நமது நம்பிக்கைகட்கும் விழைவுகட்கும் எதிரானதாகத் தோன்றும்பொழுது, அதைத் திறந்த மனத்துடன் ஒப்பும் அறிவியல் பார்வை நம்மிடம் வலுவடைய வில்லை. பல சமயங்களில் ஒரு சில கருத்துக்களை நம் மனத்தில் வலுப்படுத்திக் கொண்டு அவற்றிற்கு ஆதாரம் தேடுவதையே ஆய்வாக எண்ணுகிறோம். இந்தச் சூழ்நிலையில் டாக்டர் தமிழ்க்குடிமகனின் அணுகுமுறையும், பார்வையும் ஆய்வுலகம் ஒப்பும் நிலை பெற்று நிற்கின்றன

எனத் தம் கருத்தினைத் தெளிவாகப் புலப்படுத்தியுள்ளார் பேராசிரியர் வா.செ.கு.

"ஒரு சிறந்த ஆய்வு; நல்ல படைப்பு", "அனைவருக்கும் பயன்படுகின்ற ஒரு தரவுநூல் தொகுப்பு", "தகுதியுடைய பங்களிப்பு", "ஒரு புதுவகையான பங்களிப்பு", "இமாலயச் சாதனை", "மொத்தத்தில் அறிஞருலகும், ஆய்வுலகும் வரவேற்கத் தக்க முயற்சி" என்றெல்லாம் தாம் அணிந்துரை நல்கியுள்ள நூல்களின் ஆசிரியர்களை நெஞ்சாரப் பாராட்டும் பேராசிரியர் வா.செ.கு., "இந்தப் பின்னணியில் திரு.காந்தி அவர்களின் வாழ்க்கை வரலாற்றை எழுத முன்வந்துள்ள திரு.தி.க.சந்திரசேகரன் தனது வரலாற்று நாயகரின் நிறை, குறை இரண்டையும் விவரித்திருக்கிறார்" என்றும், "திருவள்ளுவரைப் புரிந்து கொள்வதில், பல குறள்கட்குப் பொருள் காண்பதில்

சிந்திப்போரிடையே கருத்து வேறுபாடு தவிர்க்க இயலாதது" என்றும் ஆங்காங்கே அணிந்துரைகளில் தம் தனிப்பட்ட கருத்தினை வெளிப்படுத்தவும் தவறவில்லை. இன்னும் ஒரு படி மேலே சென்று, குயிலனின் 'ஒலிவும், வரிவும், மொழியும்' என்னும் நூலுக்கு எழுதிய அணிந்துரையில்,

> நண்பர் குயிலன் அவர்கள், தம் இந்நூலில் 'எனக்கு 80 வயது ஆகிவிட்டது', 'நான் இருக்க மாட்டேன்' என்பது போன்ற கருத்துகள் இடம்பெற்றிருக்கின்றன. இது போன்ற அணுகுமுறை எனக்குச் சம்மதமில்லை. தொண்ணூற்று ஐம்பதைத் தொடும் திசையில் நடைபோட்டுக் கொண்டிருந்த போது கூட, பெரியாரும், இராஜாஜியும் இந்தச் சமுதாயத்தை, இந்த நாட்டு அரசியலை மாற்றுவோம் என்ற நம்பிக்கையுடன் தான் கடைசி நிமிடம் வரை பேசினார்கள்; எழுதினார்கள்

என நூலாசிரியரின் அணுகுமுறையுடன் மாறுபட்டு, தம் உள்ளக் கருத்தினை வெளிப்படுத்தவும் பேராசிரியர் வா.செ.கு. தவறவில்லை.

### விழுமியங்களை மதிக்கும் சான்றோர்

பேராசிரியர் வா.செ.கு. 'ஆன்றவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோர்'; எனவே விழுமியங்களுக்கு (Values) உரிய இடத்தினையும் மதிப்பினையும் தந்து, எழுதிச் செல்லும் பண்பு அவரது ஆளுமையில் இயல்பாகவே குடிகொண்டுள்ளது. இதன் வெளிப்பாட்டினை அவரது அணிந்துரைகளிலும் காண முடிகின்றது. குறிப்பாக, திரு.ஜான் லூயியின் 'புரியாத புதிர்கள்' என்னும் வித்தியாசமான நூலுக்கு எழுதிய அணிந்துரையில்

> . . . இருண்ட வானில் இமைக்கும் நேர மின்னல் போல ஒரு பிரகாசமான நம்பிக்கை ரேகை என் சிந்தையில் தோன்றி மறைகிறது. தொடர்ந்து நிகழும் பரிணாம வளர்ச்சியில், அறிவிலும் ஆற்றலிலும் வளரும் மனிதன், பண்பிலும் சமுதாய உணர்விலும் உயர்நிலை காண ஊர்ந்து செல்லக் கூடும். விழுமியங்களிலும் (Values) மனித சமுதாயம் உயர்நிலை நோக்கிப் பரிணாம வளர்ச்சி பெறக் கூடும். பெறும் என்பது என் அசையாத நம்பிக்கை

எனத் தம் கருத்தினை அழுத்தம் திருத்தமாக எடுத்துரைத்துள்ளார் பேராசிரியர் வா.செ.கு. மேலும் அவர் இத்துடன் நில்லாது, "இங்குக் கருத்து வேற்றுமை இருப்பது எதிர்பார்க்கக் கூடியதே" என நூலாசிரியரின் அறிவுத் திறத்திற்கும் மன உணர்வுக்கும் உரிய மதிப்பினைத் தந்திருப்பதும் மனங்கொளத்தக்கதாகும்.

## படிக்கத் தூண்டும் எடுப்பும் முத்தாய்ப்பான முடிப்பும்

பேராசிரியர் வா.செ.கு. தம் அணிந்துரைகளைப் படிக்கத் தூண்டும் வகையில் எடுப்பாகத் தொடங்குவதிலும், படிப்பவர் நெஞ்சில் பதியும் வண்ணம் முத்தாய்ப்பாக முடிப்பதிலும் மிகுந்த கவனம் செலுத்தியுள்ளார். சான்றாக,

> 'உலக உயிர்களில் கருவிகளை உருவாக்கும் ஆற்றல் பெற்றவன் மனிதன் மட்டுமே' என்று கூறினார் ஆல்ஃபெரெட் வாலஸ் (Alfred Wallace) என்ற அறிவியல் அறிஞர்

என்னும் சீரிய மேற்கோளுடன் தொடங்குகின்றது திரு.மணவை முஸ்தபாவின் 'கணினிக் கலைச்சொல் களஞ்சிய அகராதி'க்குப் பேராசிரியர் வா.செ.கு. அளித்துள்ள அணிந்துரை.

> அவர் (முனைவர் முத்துகண்ணப்பர்) எந்தப் பதவியையும் இறுக்கிப் பிடித்துக் கொண்டிருந்தவர் அல்லர். எதிர்ப்புத் தோன்றுமுன் இறங்கி நடந்தவர். வருந்தி அழைக்கப்பட்டால் மட்டுமே பதவிகளை ஏற்க வந்தவர். சிம்மாசனமின்றியும் சேவை செய்யலாம் என்ற தத்துவ உலகத்தினர். திரும்பிப் பார்த்தால் மன நிறைவு தரும் வாழ்க்கை சிலருக்கு மட்டுமே அமைகிறது. டாக்டர் தி.முத்துகண்ணப்பர் மன நிறைவோடு பெருமிதத்தோடு கூட, தாம் நடந்து வந்த பாதையைத் திரும்பிப் பார்க்கலாம். அது இளைய தலைமுறை பின்பற்றக்கூடிய பாதை. எதிரியும் பாராட்டும் பாதை

எனப் பயில்வார் நெஞ்சை அள்ளும் விதத்தில் 'முனைவர் முத்துகண்ணப்பரின் வாழ்க்கை வரலாறு' என்னும் நூலுக்கு எழுதிய அணிந்துரையை முத்தாய்ப்பாக முடித்துள்ளார் பேராசிரியர் வா.செ.கு.

## நறுக்குத் தறித்தாற் போன்ற மொழி

பேராசிரியர் வா.செ.குழந்தைசாமியின் மொழி எதையும் சுருங்கச் சொல்லி விளங்க வைப்பது; நறுக்குத் தறித்தாற் போன்றது; படிப்பவர் நெஞ்சில் கல்வெட்டுப் போல் பதிய வல்லது. சில சான்றுகள் வருமாறு:

ஒரு நாட்டின் தரம் அதன் மக்களின் தகுதியைப் பொறுத்தது. அதன் எதிர்காலமும் ஏற்றமும் அது உருவாக்கும் தலைவர்களின் உயர்வைப் பொறுத்தது.

அமைதியாக, ஆரவாரம் இன்றிப் புரட்சி செய்யும் இயல்பினர். உரத்துப் பேசாதவர்; ஆனால் உறுதியானவர்; பாதை பற்றிய தெளிவுள்ளவர்; பயணம் பற்றி உறுதியுள்ளவர்.

நம்மைப் போன்று நமது பழம்பெருமை பற்றி, பாரம்பரியம் பற்றி, பண்பு பற்றி, காலம், இடம் கருதாது பெருமையாகப் பேசுபவர்களும் இல்லை; நம்மைப் போன்று, தங்களது பண்டைய வரலாற்றை, சமய, இலக்கிய, தத்துவக் கருவூலங்களை அறியாதவர்களும் இல்லை.

திருவள்ளுவர் அருளிய திருக்குறள் தமிழினம் தரணிக்குத் தந்த பெருஞ்செல்வம்; தமிழிலக்கியங் களில் தலையாயது. எனினும், அது அண்மைக் காலம் வரை மக்கள் மன்றத்திற்கு எடுத்துச் செல்லப்படவில்லை.

மூவாயிரம் ஆண்டு முதிர்ச்சியுள்ள பண்பாட்டுக்குச் சொந்தக்காரரெனப் பெருமைப் பட்டுக் கொள்ளும் நம்மிடம், பொறாமை உணர்வு சற்று அதிகமாகவே இருப்பதுபோல் தோன்றுகிறது. அதனால் தானோ என்னவோ, வள்ளுவர் 'அழுக்காறாமை' என ஒரு அத்தியாயமே வகுத்தார்.

## மூன்றாம் பிறை போல் முகம் காட்டி நிற்கும் உவமைகள்

வா.செ.கு. ஒரு கவிஞராகவும் இருப்பதால் அவருடைய அணிந்துரைகளிலும் மூன்றாம் பிறையினைப் போல் ஆங்காங்கே அழகிய உவமைகள் முகம் காட்டி நிற்கக் காண்கின்றோம். உள்ளங்கவர் உதாரணங்கள் சில இதோ:

ஒவ்வொன்றிலும் படிப்பவர்கள் பயன்பெறும் ஒரு பாடம் அல்லது செய்தி பெரும்பாலும் இடம் பெற்றிருக்கிறது. மாதுளம் பழத்தைப் பிரித்தால் ஒவ்வொரு கண்ணில் இருந்தும் ஒரு மணி இருப்பது போல என்று கூறினால் மிகையாகாது.

இலக்கியம் என்பது ஒரு மெல்லிய கோடு போன்றது அன்று. அது வானவில் போன்ற அகலமான பட்டை.

அவருடைய (வேழவேந்தனுடைய) பரிமாணங்கள் பல எனினும் அவர் இமயம் போன்று உயர்ந்து நிற்பதும் தமிழக வரலாற்றில் இடம்பெறப் போவதும் கவிஞர் என்ற தகுதியால் தான்... அவருக்குச் சொற்கள், ஒரு தலைவனுக்கு மாலை போட ஒருவரை ஒருவர் தள்ளிக் கொண்டு வரும் தொண்டர்கள் போல வருகின்றன.

பரந்த கடலில் சிறு தீவு போல, பாலைவனத்தில் சோலை போல அவ்வப்பொழுது, ஆங்காங்கே இந்த மண்ணில் மகான்கள் தோன்றுகின்றார்கள்.

## தன்வரலாற்றுக் குறிப்புக்களின் பதிவு

பேராசிரியர் வா.செ.கு.வின் அணிந்துரைகளில் ஆங்காங்கே தன்வரலாற்றுக் குறிப்புக்களின் பதிவைக் காணமுடிகின்றது.

என்னைப் பொறுத்தவரை வாழ்வின் சில விழுமியங்களில் அசையாத நம்பிக்கை உண்டு. தரமும் தகுதியும், எங்கிருப்பினும், எவரிடம் மலரினும் மறைக்கப்பட இயலாதவை; நிரந்தரமாக மறைக்கப்பட்டதில்லை

என்றும்,

நான் நண்பர்கள் என்று கூறத் தக்கவர்கள் சிலர்தான். விரல் விட்டு எண்ணக் கூடியவர்கள் என்றால் மிகையாகாது. எனது இயல்பு காரணமாகவோ, அல்லது 'ஈடுபட்ட தொழிலே எல்லாம்' என்பது போன்ற எனது அணுகுமுறை காரணமாகவோ, எனது நண்பர்கள் வட்டம் குறுகியதாக, மிகக் குறுகியதாகவே நின்றுவிட்டது

என்றும்,

ஒரு கவிதைப் படைப்பைப் படிக்கும் பொழுது இது கவிதை, இது கவிதை இல்லை என்ற இரண்டு வேறுபாடுகள் தான் நான் காணக் கூடியவை

என்றும் அணிந்துரைகளில் இடம்பெற்றிருக்கும் குறிப்புக்கள் இவ்வகையில் கருதத்தக்கவை ஆகும்.

## மூவாயிரம் ஆண்டுப் பண்பாட்டின் பிரதிபலிப்பு

நிறைவாக, திரு. தங்க காமராஜ் தொகுத்துள்ள 'பிரபலமானவர்களின் மனத்தைத் தொட்டதும்! சுட்டதும்!' என்ற நூலுக்குப் பேராசிரியர் வா.செ.கு. எழுதிய அணிந்துரையில் இடம்பெற்றிருக்கும் நெகிழ்ச்சி ஊட்டும் நிகழ்ச்சிக் குறிப்பு ஒன்று:

> செருப்புத் தைக்கும் தொழிலாளி: அவரது சமயம் தெரியவில்லை: பெரும்பாலும் இந்து. உறுதியாக இசுலாமியர் அல்லர். காலையில் வேலைக்குப் போகும் பொழுதெல்லாம் அவர் தாண்டிச் செல்ல வேண்டிய மசூதி முன் நின்று, செருப்புகளைக் கழற்றி விட்டு, பயபக்தியோடு தொழுகிறார். 'இது மசூதியாயிற்றே' என்று கூறியவரிடம், 'அதனால் என்னங்க, இதுவும் சாமி கோவில் தானுங்களே' என்கிறார். இது சாதாரணமான சங்கதி அன்று. அசாதாரணமான ஒற்றுமை உணர்வின் பிரதிபலிப்பு: 'எம் மதத்தையும் சமமாக, இறைவனை அடையும் பாதை' என்று விளக்கம் கூறாமல் தன்னுள்ளே உணர்ந்துள்ள தன்மை. அவர் படியாதவர், இந்த ஞானம் ஒரு ஏடு கற்று வந்ததல்ல. ஒரு மூவாயிரம் ஆண்டுப் பண்பாட்டின் பிரதிபலிப்பு. இந்த நாட்டின் ஆன்மிகச் செல்வம்.

அறிஞர் பெர்னார்ட் ஷாவின் நூல்களுக்கு உள்ள சிறப்பு அவரது முன்னுரைகளுக்கும் உண்டு என்பர். அதுபோல் பேராசிரியர் வா.செ.குழந்தைசாமியின் நூல்களுக்கு உள்ள சிறப்பினை அவரது அணிந்துரைகளும் பெற்றுள்ளன எனலாம். "எந்த மலையில் ஏறத் தொடங்கினாலும் சிகரத்தைச் சேரும் முன்பு திரும்பிப் பார்க்காதவர்கள்; தயங்காதவர்கள்; எங்கும் இளைப்பாறத் தங்காதவர்கள்; முன்மாதிரியாகச் சொல்வதற்கு முதன்மையான தலைவர்கள்" என டாக்டர் பெ.இராசாராமனின் 'இணையிலா ஆர்க்காடு இரட்டையர் வாழ்க்கை வரலாறு' என்னும் நூலுக்குப் பேராசிரியர் வா.செ.குழந்தைசாமி எழுதிய அணிந்துரையில் இடம்பெற்றிருக்கும் தகுதிக் குறிப்பு அவரது ஆளுமைப் பண்புக்கும் நூற்றுக்கு நூறு பொருந்தி வருவதே ஆகும்.

### குறிப்புகள்

1. எமது பார்வையில் . . . (அணிந்துரைகள்: தொகுதி 1), p.x.
2. முன்னுரை, காலம் காலமாக வரும் கற்பனை நகர்கள்: வள்ளுவர் படைக்கும் வையத்துச் சுவர்க்கம். p.xxiv.

# 9. குலோத்துங்கத்தின் பாவிகம்

> பாவேந்தர் ஓர் அறிவு சார்ந்த தமிழியக் கவி என்றால், குலோத்துங்கனோ தமிழ் மரபில் வேரூன்றிய அறிவு யுகக் கவியாக அமைகின்றார்.
>
> —கா.செல்லப்பன்[1]

குலோத்துங்கன் இருபதாம் நூற்றாண்டின் இரண்டாம் பகுதியில் கவிதைகள் படைக்கத் தொடங்கியவர்; இருபத்தோராவது நூற்றாண்டிலும் தமது கவிதைப் பணியைத் தொடர்ந்து வருபவர். இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதையின் இருபெருஞ் சுடர்களான பாரதியார், பாரதிதாசன் என்னும் இருவரது தாக்கமும் பெற்றவராகக் குலோத்துங்கன் திறனாய்வாளர்களால் அடையாளம் காணப் பெறுள்ளார்; அதே வேளையில் தமது தனித்தன்மை விளங்கவும் அவர் கவிதைகள் படைத்துள்ளார். யாங்கும், எல்லோர்க்கும் சம வாய்ப்பு நிறைந்ததான மண்ணுலகைச் சமைப்பது அவரது குறிக்கோள். "என் பயணம் பெரிது; செலும் பாதை நெடிது" என்னும் உயரிய கொள்கை முழக்கத்துடன் கவிதை உலகில் பல்லாண்டுக் காலமாகப் பீடு நடை பயின்று வருகிறார் குலோத்துங்கன். தாழா உள்ளம், கல்வி உரம், கொள்கை நலம் என்னும் முப்பெருஞ் செல்வங்களும் பொருந்திய அவரது வாழ்வு தவ வாழ்வாகும். "யான் நிலத்திடை தேவன்: எந்தன் நெறியினில் தாழ்வதில்லேன்" என்பது அவரது ஒப்புதல் வாக்குமூலம். "எம் பணி மானிடர் ஏற்றம்" என்னும் கூற்று அவரது கவியுள்ளத்தை உணர்த்துவது. சாதனைப் பாதையில் மனம் தளராது நடை பயில்வது அவரது வாழ்க்கை நெறி.

பேராசிரியர் ப.க.பொன்னுசாமி குறிப்பிடுவது போல்,

> இரண்டு நூற்றாண்டுகளின் சந்திப்பின் விளிம்பில் கால்களை ஊன்றி நின்று கொண்டு, முன்னும் பின்னும் ஓடித் திளைக்கும் வாய்ப்பைப் பெற்றிருக்கிறார் குலோத்துங்கன். இந்த எல்லைப் பரப்பில் அவருடைய எழுதுகோல் ஆழமாக உழுது கொண்டிருக்கிறது.[2]

"முயற்சி உண்டெனின் முழுமை காண்பம்" என்பது குலோத்துங்கன் இன்றைய தலைமுறையினருக்கு வழங்கும் இரத்தினச் சுருக்கமான செய்தி. "இயலும் என்பவர்க்கு எதுவும் அரிதல" என்பது அவரது தாரக மந்திரம். "மலையாது முன்னேறிச் செல்வோம் – மனித வாழ்வு முடிவில்லாத முன்னேற்றப் பயணம்" என்பது குலோத்துங்கம். 'உள்ளத்தில் ஏணியுளர் உயர்வர்' என்பதும், 'திடம், குவிந்த சிந்தை, செயலின் திறம் மூன்றும் கைவரப் பெற்றோர் தெய்வ நிலையை அடைவர்'

என்பதும் ஆளுமை வளர்ச்சி நோக்கில் கவிஞர் படைக்கும் அரிச்சுவடிகள். கவிஞரின் நோக்கில் மாறுவது – நிமிடந்தோறும் வளர்வது – படி ஒவ்வொன்றாய் ஏறுவது வெற்றியாளர்களின் முப்பெரும் ஆளுமைப் பண்புகள்.

> அடைய வேண்டிய இலக்கைப் பற்றிக் கவிதை வடித்தவர், அந்த இலக்கை நோக்கித் தாம் வாழ்ந்து காட்டியது மட்டுமல்ல, எதிர்காலத் தலைமுறைக்குக் கவிதையால் எடுத்துக்காட்டியவர்[3]

எனப் பாரத மணித்திரு நாட்டின் முன்னைக் குடியரசுத் தலைவர் ஆ.ப.ஜெ.அப்துல்கலாம், வா.செ.கு.வின் ஆளுமைத்திறன் பற்றிக் குறிப்பிடுவது மனங்கொளத் தக்கதாகும்.

> கொள்கையில் தெளிவு: புதிய அணுகுமுறை: அழகான கருத்துக்கள்: இவை கவிதை வடிவம் கொண்டு காட்சி அளிப்பதை எண்ணி எண்ணி நான் வியந்தது உண்டு[4]

எனக் குலோத்துங்கனின் கவிதைப் பரிமாணங்களை அடையாளம் காட்டுவர் ம.ப.பெரியசாமித் தூரன். அறிவியல் பார்வை, ஆன்மிக இதயம், இலக்கியச் சுவை: இவை மூன்றும் ஒன்றிணைந்த கூட்டுக் களி குலோத்துங்கன்.

> குலோத்துங்கன் கவிதைகள் அனைத்திலும் இடம்பெறுவன மானுட விழுமியங்களே; மனிதச் சிறப்புக்களே; மாந்தரின முன்னேற்றங்களே[5]

என மதிப்பிடுவர் மூதறிஞர் தமிழண்ணல்.

"வழிவழி வந்த பண்பின் மதிவளம் நமது செல்வம்" என்பது குலோத்துங்கனின் உயிர்க் கொள்கை. 'சிந்தையும் தோளும் சேர்ந்தது மனிதம்' – 'நிமிர்ந்து நின்று முயல்வது மனிதம்' என்பது கவிஞர் மனிதத்திற்கு வகுக்கும் வரைவிலக்கணம். 'சக்தி முழுமையும் குவிந்த காலை இயல்வது வெற்றி; இங்கு ஏழை என்று எவரும் இல்லை' என்பது கவிஞரின் முடிந்த முடிபு. 'கல்வி வளர்ச்சி வாயில்; வீறு தருவது; ஆளுமை தருவது' என்பது அவரது அசைக்க முடியாத நம்பிக்கை. இன்னும் ஒரு படி மேலே சென்று, 'கடவுளர் தவறினாலும் கைவிடாச் செல்வம்' எனக் கல்வியை உயர்த்திப் பிடிப்பார் குலோத்துங்கன். கல்வி யுக மலர்ச்சிக்குக் கட்டியம் கூறி வரவேற்பதில் அவர் மோனையைப் போல் முன்னிற்பார்.

'புத்தம் புதிய அறிவியற் கலைகளில் வல்லமை எய்தவும், வளர்தமிழ் வழியதைச் சொல்லவும் விழைந்த தொண்டன்' என்பது கவிஞர் தம்மைப் பற்றிக் கூறிக் கொள்ளும் சுய அறிமுகம். இனிய தமிழ் 'புதுப்பிறவி' எடுக்க வேண்டும், எதிர்காலத் தேவையெலாம் ஏற்க

வேண்டும் என்பது கவிஞரின் விழைவு. 'தமிழச் சாதி – ஓர் குவலயக் குடும்பம்' என்பதைப் பறைசாற்றுவதில் கவிஞர் கொள்ளும் பெருமித உணர்வு மாணப் பெரிது. கவிஞரின் அகராதியில் 'இதயத்தில் எந்தமிழைத் தம் மொழி என்று எண்ணுபவர்கள் யாவரும் தமிழரே'. 'மண்ணிடை நிற்பினும் வாமனன் போன்று விண்ணிடை வளர்ந்து, விரிந்த பார்வையால் உலகனைத்தும் நம் வழியில் ஈர்த்து உயர்ந்திடல் வேண்டும்' என்பது தமிழினத்திற்குக் குலோத்துங்கன் விடுக்கும் விழுமிய செய்தி.

சாதி ஒழிப்பும் தமிழ் வளர்ப்பும் குலோத்துங்கனைப் பொறுத்தவரையில் இரு கண்களைப் போல. ஒல்லும் வகையெல்லாம் ஓவாது சாதிக் கொடுமையைக் கடுமையாகச் சாடும் அவர், செந்தமிழ் செழுந்தமிழ் ஆவதற்கான – தகத்தகாயத் தமிழாக நிலைபெறுவதற்கான வழிவகைகளையும் தம் நூல்களில் விரிவாக எடுத்துரைத்துள்ளார். அவரது கருத்தில் சாதிப் பற்றும் தமிழின உணர்வும் ஒன்றை ஒன்று மோதும் தகையன; முன்னது வளருமேல் பின்னது மங்கும்; மழுங்கும். எனவே, எப்பாடு பட்டேனும் வேரொடும், தளிரொடும், முளைக்கும் வித்தொடும் சாதியை வெட்டி வீழ்த்திட வேண்டும், இல்லையேல் சாதித் தழலில் தமிழினம் வெந்து மடியும் என எச்சரித்துள்ளார் குலோத்துங்கன்.

ஆற்றல்சால் திறனாய்வாளர்களின் பார்வையில் 'மானுட யாத்திரை' குலோத்துங்கனின் நீண்ட கால இலக்கியப் பங்களிப்பு; முதிர்ந்த அனுபவத்தில் பிறந்த கலைப் படைப்பு; காப்பிய வடிவில் பரந்து பட்ட களத்தில் மனித நாகரிக வரலாற்றைக் காணும் முதல் முயற்சி; 'ஐந்து சால்பு ஊன்றிய தூண்' (திருக்குறள் 983) என்றபடி, சமுதாயம், அரசியல், அறிவியல், ஆன்மிகம், சமயம் என்னும் ஐம்பெருங் கூறுபாடுகளால் ஆன ஒரு முழுமையான காப்பியம். நிறைவாக, 'நாளை தரணி ஒரு சுவர்க்கம்' – 'வையம் மேற்செல்லும்; மேலும் செல்லும்' – 'விண்ணகம் இங்குக் காண்போம்' – என்னும் முப்பெரும் கருத்தியல்களே குலோத்துங்கத்தின் பாவிகம் எனலாம்.

## குறிப்புகள்

1. 'தமிழில் ஓர் அறிவுயுகக் கவி', மானுடம் பாடும் கவிஞர் குலோத்துங்கன் கவிதைகள்: ஒரு பன்முகப் பார்வை, ப. 32.
2. நூற்றாண்டுத் தமிழ், ப.27.
3. பன்முக நோக்கில் குலோத்துங்கன் கவிதைகள் கருத்தரங்கம்: துவக்க உரை, ப. 18.
4. முன்னுரை, வா.செ.குழந்தைசாமியின் 'பாரதியின் அறிவியல் பார்வை', ப.4.
5. முன்னுரை, மானுடம் பாடும் கவிஞர் குலோத்துங்கன் கவிதைகள்: ஒரு பன்முகப் பார்வை, ப. 9.

# பின்னிணைப்புகள்

## பின்னிணைப்பு 1

## வா.செ.குழந்தைசாமி (குலோத்துங்கன்) படைப்புலகம்

### I. கவிதை

1. குலோத்துங்கன் கவிதைகள். சென்னை: பாரதி பதிப்பகம், 2002.
2. உள்ளத்தில் ஏணியுளர் உயர்வர். சென்னை: பாரதி பதிப்பகம், 2006.
3. மானுட யாத்திரை. பாகம் 1 : சமுதாயம், அரசியல்; பாகம் 2: அறிவியல்; பாகம் 3: ஆன்மிகம், சமயம். சென்னை: பாரதி பதிப்பகம், 2007; 2009.

### II. உரைநடை

1. பாரதியின் அறிவியல் பார்வை. சென்னை: பாரதி பதிப்பகம், 1983.
2. அறிவியல் தமிழ். சென்னை: பாரதி பதிப்பகம், ஏழாம் பதிப்பு 2006.
3. வாழும் வள்ளுவம். சென்னை: பாரதி பதிப்பகம், எட்டாம் பதிப்பு 2004.
4. தமிழ் எழுத்துச் சீர்திருத்தம். சென்னை: பாரதி பதிப்பகம், மூன்றாம் பதிப்பு 2000.
5. தாய்மொழி பெறாததைச் சமுதாயம் பெறாது! சென்னை: பாரதி பதிப்பகம், இரண்டாம் பதிப்பு 1998.
6. மதிவளம் நமது செல்வம். சென்னை: பாரதி பதிப்பகம், இரண்டாம் பதிப்பு 2000.
7. சமுதாயச் சிந்தனைகள். சென்னை: பாரதி பதிப்பகம், இரண்டாம் பதிப்பு 2001.
8. இது கல்வி யுகம். சென்னை: பாரதி பதிப்பகம், இரண்டாம் பதிப்பு 2002.
9. செவ்வியல் மொழி முதல் சேது சமுத்திரம் வரை. சென்னை: பாரதி பதிப்பகம், 2003.
10. உலகச் செவ்வியல் மொழிகளின் வரிசையில் தமிழ். சென்னை: பாரதி பதிப்பகம், 2005.
11. தமிழ் வளர்ச்சி மேம்பாடு + பயன்பாடு = வளர்ச்சி. சென்னை: பாரதி பதிப்பகம், 2006.

12. காலம் காலமாக வரும் கற்பனை நகர்கள்: வள்ளுவர் படைக்கும் வையத்துச் சுவர்க்கம். சென்னை: பாவை பப்ளிகேஷன்ஸ், 2008.

## பின்னிணைப்பு 2

## வா.செ.குழந்தைசாமி (குலோத்துங்கன்) பற்றிய நூல்கள்

### I. ஆய்வு நூல்கள்

1. நீல பத்மநாபன், முருகையன், பிரேமா நந்தகுமார், தணிகைச் செல்வன். குலோத்துங்கனின் காவிய உலகம். சென்னை: பாரதி பதிப்பகம், 1990.
2. மானுடம் பாடும் கவிஞர் குலோத்துங்கன் கவிதைகள்: ஒரு பன்முகப் பார்வை. சென்னை: பாரதி பதிப்பகம், 2004.
3. பா.வீரமணி. குலோத்துங்கன் கவிதைகள் ஒரு கண்ணோட்டம். சென்னை: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்., 2004.
4. குலோத்துங்கம். குலோத்துங்கன் (பேரா.வா.செ.குழந்தைசாமி படைப்புலகம் பற்றிய தேசியக் கருத்தரங்கக் கட்டுரைகள்). சென்னை: பாரதி பப்ளிகேஷன்ஸ், 2007.
5. உலகநாயகி பழனி (தொகுப்பாசிரியர்). குலோத்துங்கன் கவிதைப் பரிமாணங்கள்: திறனாய்வுத் தொகுப்பு. வேடந்தாங்கல்: இலக்கிய வீதி, 2007.
6. ம.ரா.போ.குருசாமி. குலோத்துங்கன் கவிதைகள் ஒரு திறனாய்வுப் பார்வை. சென்னை: பாவை பப்ளிகேஷன்ஸ், 2009.
7. மு.குழந்தைவேலு. குலோத்துங்கன் கவிதைகள் – ஒரு கோபுர தீபம். சென்னை: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 2009.
8. சு.கு. பன்னீர்செல்வம், குலோத்துங்கன் பார்வையில் சமுதாயம், சென்னை: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 2009.
9. கே.ரவி & உலகநாயகி பழனி (தொகுப்பாசிரியர்கள்). குலோத்துங்கன் கவிதைகள்: பன்முக ஆய்வு. சென்னை: திரிசக்தி பதிப்பகம், 2010.

### II. வாழ்க்கைக் குறிப்பு

1. டாக்டர் வா.செ.குழந்தைசாமி வாழ்க்கைக் குறிப்பு. டாக்டர் வா.செ.குழந்தைசாமி பாராட்டு விழாக் குழுவினர், கரூர்.

### III. சிறுவெளியீடுகள்

1. அப்துல் கலாம், ஆ.ப.ஜெ. பன்முக நோக்கில் குலோத்துங்கன் கவிதைகள் கருத்தரங்கம்: துவக்க உரை. சென்னை: பாரதி பதிப்பகம், 2010.

2. விக்கிரமன். மு.குழந்தைவேலுவின் ‘குலோத்துங்கன் கவிதைகள் ஒரு கோபுர தீபம்’ என்னும் திறனாய்வு நூலுக்கான மதிப்பீடு. சென்னை: இலக்கியப் பீடம்.

## பின்னிணைப்பு 3

## வா.செ.குழந்தைசாமி (குலோத்துங்கன்) நூல்களுக்கு அணிந்துரை எழுதியுள்ள சான்றோர்கள்

| | | |
|---|---|---|
| 1. | ம.பொ.சிவஞானம் | – வளர்க தமிழ் (1982) |
| 2. | ம.ப.பெரியசாமித் தூரன் | – பாரதியின் அறிவியல் பார்வை (1983) |
| 3. | க.கைலாசபதி | – வாயில் திறக்கட்டும் (1983) |
| 4. | அ.ச.ஞானசம்பந்தன் | – விண் சமைப்போர் வருக (1984)<br>வாழும் வள்ளுவம் (1987) |
| 5. | தவத்திரு குன்றக்குடி அடிகளார் | – அறிவியல் தமிழ் (1985)<br>வாழும் வள்ளுவம் (1987) |
| 6. | சி.சுப்ரமணியம் | – தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் (1990)<br>விதியே, விதியே தமிழச் சாதியை...? (1996) |
| 7. | தமிழண்ணல் | – கதவுகள் காப்பதில்லை (1990)<br>மானுடம் பாடும் கவிஞர் குலோத்துங்கன் கவிதைகள் (2004) |
| 8. | சிலம்பொலி சு.செல்லப்பன் | – குலோத்துங்கனின் காவிய உலகம் (1990) |
| 9. | கார்த்திகேசு சிவத்தம்பி | – குலோத்துங்கன் கவிதைகள் (2002) |
| 10. | கா.செல்லப்பன் | – குலோத்துங்கன் கவிதைகள் ஒரு கண்ணோட்டம் (2004) |
| 11. | ஜார்ஜ் எல்.ஹார்ட் (George L.Hart) | – உலகச் செவ்வியல் மொழிகளின் வரிசையில் தமிழ் (2005) |
| 12. | இ.சுந்தரமூர்த்தி | – உள்ளத்தில் ஏணியுளர் உயர்வர் (2006) |
| 13. | ம.ரா.போ.குருசாமி | – குலோத்துங்கம் (2007) |
| 14. | சா.ஜெகத்ரட்சகன் | – குலோத்துங்கன் கவிதைப் பரிமாணங்கள் (2007) |

15. சிற்பி பாலசுப்பிரமணியம் – குலோத்துங்கன் கவிதைப் பரிமாணங்கள் (2007)

16. இந்திரா பார்த்தசாரதி – மானுட யாத்திரை பாகம் 1: சமுதாயம், அரசியல் (2007)

17. ஊரன் அடிகள் – மானுட யாத்திரை பாகம் 2: அரசியல் (2007)

18. சோ.ந.கந்தசாமி – காலம் காலமாக வரும் கற்பனை நகர்கள்: வள்ளுவர் படைக்கும் வையத்துச் சுவர்க்கம் (2008)

19. கா.மீனாட்சி சுந்தரம் – மானுட யாத்திரை பாகம் 3: ஆன்மிகம், சமயம் (2009)

20. ப.ஸ்ரீ.இராகவன் – மானுட யாத்திரை பாகம் 3: ஆன்மிகம், சமயம் (2009)

21. தெ.ஞானசுந்தரம் – குலோத்துங்கன் கவிதைகள் ஒரு திறனாய்வுப் பார்வை (2009)

22. இரா.மோகன் – என் பார்வையில்.... (அணிந்துரைகள், தொகுதி –1) (2009)


## பின்னிணைப்பு 4

## ஆங்கில நூல்கள்: மொழிபெயர்ப்பும் திறனாய்வும்


1. Kulandai Swami, V.C. ***The Immortal Kural*** (Translated by the Author). New Delhi: Sahitya Akademi, 1994.

2. Kulothungan. ***Earth is Paradise Enough*** (Poems in Tamil Translated by the Author). Chennai: Pavai Publications, Second Print 2000.

3. Murugan, V. (Translator). ***An Unending Ascent.*** Chennai: Pavai Publications, 2002.

4. Prema Nandakumar. ***Kulothungan: A Poet of Today and Tomorrow.*** New Delhi: Viva Books Private Limited, 2002.

5. Sirpi Balasubramaniam (Editor). ***A Hymns to Humanity: Poems of Kulothungan: Critical Essays.*** Chennai: Pon Naavarasu Trust, 1999.

6. Subramanian, K.S. ***Kulothungan Poems : Some Reflections***. Chennai: Pon Naavarasu Trust, 2004.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
# சென்னை - 600 113
## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| தொல்காப்பியம்-சொல்லதிகார மூலமும் சேனாவரையருரையும் | 200.00 |
| தொல்காப்பியம்-பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 325.00 |
| தொல்காப்பியம் - பொருளதிகார மூலமும் பேராசிரியர் உரையும் | 300.00 |
| Economic Heritage of the Tamils | 115.00 |
| மலேசியத் தமிழரும் தமிழும் | 100.00 |
| தமிழ்ப் புனைகதைகளில் உளவியல் | 35.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - தொல்லியல், வரலாறு, சமூகவியல் | 100.00 |
| கதைப் பாடல்களில் கட்டுப்பாட்டு மீறல்கள் | 95.00 |
| Bibliography on Translations | 175.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 200.00 |
| தமிழ்ச்சொற் பிறப்பாராய்ச்சி | 45.00 |
| மொழி பெயர்ப்பியல் | 45.00 |
| சி.வை. தாமோதரம்பிள்ளை | 40.00 |
| சொல்லிலக்கணக் கோட்பாடு தொல்காப்பியம் - முதல் பகுதி | 70.00 |
| இசுலாமியச் சிற்றிலக்கியங்கள் | 40.00 |
| பாவாணர் கடவுள் நம்பிக்கையும் சமயச் சால்பும் | 30.00 |
| மகளிர் முன்னேற்றத்தில் "அவள் விகடன்" இதழின் பங்களிப்பு | 35.00 |
| தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 95.00 |
| தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் | 120.00 |
| மீனவர் சமுதாய நாட்டுப்புறப் பாடல்கள் | 35.00 |
| A Course in Modern Standard Tamil | 65.00 |
| இசை மருத்துவம் | 45.00 |
| கம்பன் களஞ்சியம் | 550.00 |
| குலோத்துங்கன் பார்வையில் சமுதாயம் | 70.00 |
| நவீன நாடகங்களும் ஊடகங்களும் | 50.00 |
| மனிதப் புனிதர் கக்கன் | 110.00 |
| மூவர் தமிழ் – மூன்று பார்வைகள் | 50.00 |
| காமன்வெல்த் நாடுகளின் கவிதைகள் | 100.00 |
| அறிஞர்களின் பார்வையில் பேரறிஞர் அண்ணா | 145.00 |
| மொழிபெயர்ப்பு ஒரு கவின் கலை | 75.00 |
| சங்க இலக்கியத்தில் சமூக ஆய்வுகள் | 55.00 |
| கவிஞர் குலோத்துங்கனின் 'மானுட யாத்திரை' காவிய வானில் ஒரு தாரகை | 45.00 |
| தமிழ் நாடக வகையும் வரலாறும் | 110.00 |

---

689 வா.செ.கு. என்ற ஆளுமையாளர் 50 .00